

புரட்டிப் பார்த்துவிட்டு கவாஸ்கர், ''நல்ல கலெக்‌ஷன்! பொறுமையாகத் தயாரித்திருக்கிறீர்கள். பாராட்டுதல்கள்'' என எழுதிக் கையெழுத்திட்டுக் கொடுத்தார். அடுத்து வந்த ஒன்பது வயதுச் சிறுமி கையில் பல்வேறு காமிக் புத்தகங்கள், சிறுவர்களுக்கான கதைப் புத்தகங்கள் அதிகமாய் இருந்தன. அதைப் பார்த்த கவாஸ்கர், ''இவ்வளவு புத்தகங்கள் இருக்க, என் புத்தகத்தை நீ எங்கே படிக்கப் போகிறாய்?'' என ஆங்கிலத்தில் கேட்க, ''நான் படிப்பேன்'' என்று அச்சிறுமி சிரித்துக் கொண்டே உறுதி அளித்தாள். வயது முதிர்ந்தவர்களுக்கு 'ரிகார்ட்ஸ்' என எழுதிக் கையெழுத்துப் போட்டார். நடுத்தர வயது என்றால் 'கிரீட்டிங்ஸ்' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டார். சிறுவர்கள் என்றால் 'குட் விஷஸ்' என்று எழுதினார்.

''கையெழுத்துப் போட்டுப் போட்டு அலுக்கவில்லையா?'' என்று கவாஸ்கரைக்

# கல்கி வாசகருக்கு கவாஸ்கரின் வாழ்த்து!

ஓய்வுநாளான டிசம்பர் 25-ம் தேதி கவாஸ்கரைப் பொறுத்தவரை ஓய்வில்லாத நாள்தான். அன்று இரு புத்தகக் கடைகளில் தமது புதிய புத்தகத்தில் (ஐடல்ஸ்) கையெழுத்துப் போட்டு வாசகர்களுக்கு வழங்கிக் கொண்டிருந்தார். புதிய புத்தகத்தில் மட்டுமல்ல சில துண்டுக் காகிதங்களிலும், ஆட்டோகிராப் புத்தகங்களிலும் பழைய 'சன்னிடேஸ்' புத்தகங்களிலும் பலர் கையெழுத்து வாங்கினார்கள். வெளிநாட்டவர்கள் இருவர் கையெழுத்து வாங்கியதோடு மட்டுமில்லாமல் ''உங்கள் ஆட்டத்தை நாங்கள் நன்றாகப் பார்க்க வேண்டும். அதற்கு சேப்பாக் மைதானத்தில் எது 'சிறந்த இடம்?'' என்று கேட்க, ''எம். ஜே. கோபாலன் வாசல்தான் சிறந்தது என நினைக்கிறேன்'' என்றார். இதற்குள் ஒரு சிறு குழந்தையின் அழுகை ஒலி பலமாகக் கேட்டது.

அக்குழந்தையை வைத்துக் கொண்டிருந்த தாயாரைப் பார்த்து, ''சன்னிடேஸ் புத்தகத்தை அதற்குப் படித்துக் காண்பித்தீர்களா?'' என்று கவாஸ்கர் கேட்க ஒரே சிரிப்பு! குழந்தை அழுததால் அதற்கு ஒரு போனஸ் கையெழுத்து கிடைத்தது. ஆம். அந்தக் குழந்தையின் தாயார் விரும்பியபடியே குழந்தையின் சட்டையில் கையெழுத்திட்டார் கனில். பையனின் பெயர் சித்தார்த்தா.

கவாஸ்கர் பற்றிய படங்களோ, செய்திகளோ எந்தப் பத்திரிகையில் வந்தாலும் கே. வி. சாந்தா என்ற இளம் பெண் அவைகளைக் கத்தரித்து ஆல்பத்தில் ஒட்டிவிடுவார். அதைக் கவாஸ்கரிடம் காண்பித்தார். ஒவ்வொரு பக்கமாக, நிதானமாகப்

கேட்டேன். ''இதுவும் ஒருவகை பயிற்சிதான். 'கட்' அல்லது 'ஹுக்' பண்ண இந்தப் பயிற்சி உபயோகமாகும்!'' என்றார் சிரித்துக் கொண்டே.

கென்னடி புத்தகக் கடையிலிருந்து கவாஸ்கர் வெளியே வரும்போது உற்சாகக் கூட்டம் அவரைச் சுற்றிச் சூழ்ந்து கொள்ள, சரியாக அதே நேரத்தில் முதலமைச்சர் எம். ஜி. ஆர். பண்ருட்டி ராமச்சந்திரனுடன் அண்ணா சிலைக்கு மாலையிட அந்த வழியாகப் போனார். கூட்டத்தைப் பார்த்ததும் முதல்வர் என்னமோ ஏதோ என்று கவலையுடன் வண்டியை நிறுத்தினார். கூட்டத்திலிருந்து விலகிச் சாலை ஓரமாக நின்றிருந்த என்னை அழைத்தார். 'என்ன?' என்று ஜாடையாகக் கேட்டார். விஷயத்தைச் சொன்னவுடன் 'அப்படியா?' என்று சமாதானமடைந்து நகர்ந்தார்.

ஒருவருக்காவது கவாஸ்கர் தேதி குறிப்பிடவில்லை. ''கிறிஸ்துமஸ் 83'' என்றுதான் எழுதினார். இதோ கல்கி வாசகர்களுக்காக கவாஸ்கரின் கையெழுத்திட்ட வாழ்த்து.

Kalki readers,
Have a Happy 1984
[signature]

சந்தித்தவர்: சலன்
படம்: பாலாஜி



மாருதி காரில் பவனி,...

- திங்கட்கிழமை ஆட்டமிருக்காது என்று வீட்டில் தங்கி விட்டவர்களை நேரத்தில் ஆட்டத்தைத் துவங்க வைத்துத் திணற அடித்தவர்கள் சேப்பாக்க மைதானப் பணியாளர்கள் பார்த்தசாரதியும் அவரது குழுவினரும்!

- பூவா தலையா சோதனையில் லாயிட் குழுவுக்கு வெற்றி. 'யாருக்கு வெற்றி?' என்று கபில்தேவிடம் தமிழ்நாடு கிரிக்கெட் சங்கத் தலைவர் திரு. சிதம்பரம் கேட்டபோது கபில்தேவ் தொங்கிய முகத்துடன், ''They won!'' என்று சொல்லி நகர்ந்தார்!

- கடைசி ஆறுவது டெஸ்டில் கிடைத்த விக்கெட்களும் ஆறு! ஹோல்டிங் நான்கைப் பற்றிக் கொண்டார். பாக்கி இரண்டில் ரிச்சாடு, கபில்தேவ் ஆளுக்கொன்றாகப் பங்கு போட்டுக் கொண்டனர்!

- மேற்கிந்தியத் தீவு குழுவுக்கு இந்திய மானேஜர் பூபதி. இவரது சாதனை மேற்கிந்தியத் தீவு – இந்திய டெஸ்ட் வீரர்களைப் பற்றிய ரஸமான கட்டுரைகளடங்கிய லாவினீர்.

- தமக்கிருந்த ஷூட்டிங்கையும் 'கான்சல்' செய்து விட்டு மேற்கிந்தியத் தீவு குழு கிரிக்கெட் ஆட்டத்தைக் காண வந்திருந்தவர் ஒய். ஜி. மகேந்திரன். ''என் கை ஊறுகிறது! அந்தக் காலத்தில் எங்கள் குழு 'டிராம்ஸ்' அடிச்ச ஸ்டேடியத்தை அலற அடிச்சிருக்கு! நாற்காலிகளுக்குப் பாதுகாவலர் பார்த்தஸாரதி என் அம்மாவிடம் என்னைப் பற்றிப் புகார் (ரிப்போர்ட்)கொடுத்திருக்கார்! ஆனாலும் எங்க கொட்டம் ஓயலே!''

- உணவு வேளையில் மந்திரி ராகவானந்தத்திடம் தமிழக கிரிக்கெட் சங்கக் காரியதரிசி, ''உங்களுக்குப் புரட்சித்தலைவரை அறிமுகப்படுத்தப் போகிறேன்!'' என்றபோது அவர் அயர்ந்து போனார்!

  ''செலக்டர் பிஷன் சிங் பேடி. இந்திய செலக்ஷன்லே பல புரட்சிகளைக் காண்கிறவர் இவர்!'' என்று அறிமுகப்படுத்தினார் ஸ்ரீராமன்.

  புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர். டெஸ்டின்போது புயலால் சேதமுற்ற பகுதிகளுக்குச்சென்றிருந்தார். கிரிக்கெட் சேதங்களைபேடி வெளியிலமர்ந்துபார்வையிட்டுக் கொண்டிருந்தார்!

- நூறு டெஸ்ட் பந்தயங்களை விமரிசித்துச் சென்னை சேப்பாக்க டெஸ்டோடு ஓய்வு பெறுகிறார் 'டைம்ஸ் ஆப் இந்தியா' விளையாட்டுத் துறை ஆசிரியர் கே.என். பிரபு. தமிழக கிரிக்கெட் சங்கத் தலைவர் எம். ஏ. சிதம்பரம் இவருக்கு வெள்ளித் தட்டு பரிசளித்துக் கௌரவித்தார்! தமிழகத்தில் படித்து மெரினாவில் கிரிக்கெட் ஆடி பம்பாயில் பத்திரிகை விளையாட்டு விமர்சகராகக் குடியேறியவர் கே. என். பிரபு.

- ரேடியோ தமிழ் விமர்சகர், திரு. ராமமூர்த்தி கூறிய ஒரு அறுவை ஜோக்:

  ''பத்தாண்டில் உங்களை யாரும்கையாலாகாதவர் என்று குற்றம் சொல்ல முடியாது'' என்று ஜோன்ஸிடம் ஒரு நண்பர் சொன்னார்.

  ஜோன்ஸ்: ஏன்?

# உலக சாதனை கண்ட கவாஸ்கர்

நண்பர்: நீங்கள் பந்தைக் கையாடிக் கல்கத்தாவில் புகழ் பெற்று விட்டீர்களே!''

[கல்கத்தாவில் ஹெரன்ஸ் பந்தைக் கையாடி அவுட்டானது அனைவரும் அறிந்ததே!]

''இந்திய ஆட்டக்காரர்கள் இப்படி அல்பாயுசில் 'அவுட்' டாகிக் கொண்டிருக்கிறார்களே! என்ன செய்வது?''

''ஒன்று செய்யுங்கள்! இந்தியக் குழுவிலேயே சாஸ்திரி இருக்கிறார்! அவரைக் கொண்டு நவக்கிரஹ ஹோமம் பண்ணி வைச்சிடுங்கோ!''

சட்டசபையில் 'வாக் அவுட்' சர்வ சாதாரணம். கிரிக்கெட் மைதானத்திலிருந்து லாயிட் தம் குழுவினரோடு 'வாக்அவுட்' செய்தார்! காரணம் ஒரு சிறிய கல் டேவிஸைப் பதம் பார்த்து விட்டது தான்! கவாஸ்கர் இதைப் பற்றிச் சொன்னது:

''ஸார்! என் உன்னிப்பை (Concentration) கெடுக்க நடந்த நாடகமொன்னு எனக்குத் தோன்றியது. இந்த 'வாக் அவுட்'டினால் உடன் இழப்பு இந்திய விக்கெட்டுகள் இரண்டு!''

''இந்திய கிரிக்கெட் ஆட்டக்காரங்க ஐந்து நாள் பந்தயத்தை 'ஒருநாள்' கிரிக்கெட் பந்தயம் மாதிரி ஆடறாங்களே!''

''அவங்க 'ஒருநாள் கிரிக்கெட்' சாம்பியன்கள்தானே! அப்புறம் எப்படி ஆடுவாங்களாம்!''

மேற்கிந்தியத்தீவில் வழங்கும் 'Calypso' பாட்டு:

It was Gavaskar
The Real master
Just like a wall
We Couldn't out Gavaskar at all
Not at all
You know West Indies couldn't
out Gavaskar at all!



இரட்டை சதம் கண்டு முன்னேறுகிறார்

**கறுப்பு பிராட்மன் கவாஸ்கரின் உலக சாதனைப் பற்றிப் பிரமுகர்கள்:**

ம. பொ. சி: ஆறு டெஸ்ட்களில் ஏற்பட்ட தலைகுனிவைச் சரிக்கட்டி களில் கவாஸ்கர் உலக சாதனை கண்டு இந்தியாவின் புகழை உயர்த்திவிட்டார்!

எம். ஏ. சிதம்பரம்: களில் கவாஸ்கரின் சேப்பாக்க சாதனை கிரிக்கெட் சரித்திரத்தில் பொன்னெழுத்தில் பொறிக்கப்பட்டு விட்டது. அவரது பாட்டிங் நிபுணத்துவம் என்றும் நினைவில் நிற்கும்.

வெங்கட்: ஒரு இந்தியனாக இருப்பதில் பெருமையடைகிறேன். இந்தியர்கள் ஒவ்வொருவரும் பெருமைப்படக் கூடிய சாதனையைக் கண்டிருக்கிறார் கவாஸ்கர். அவரது சாதனை சரித்திரப் பிரசித்தி பெற்று விட்டது.

மந்திரி ராகவானந்தம்: உலக சாதனை கண்ட கவாஸ்கரின் கைவிரலில் ஒரு சவரன் மோதிரம் போடப்போகிறேன்.

ஸ்ரீராமன்: சேப்பாக்கம் மைதானம் என்றும் நினைவிலிருக்கும்படியாக கவாஸ்கர் உலக ரிகார்டைக் கண்டு விட்டார்! அவரது சாதனையைப் பாராட்டி 10,001 ரூபாய் வெகுமதியைத் தமிழக கிரிக்கெட் சங்கம் வழங்கிவிட்டது!

தொழிலதிபர் மகாலிங்கத்தின் மகன் மாணிக்கம்: இந்தியாவின் புகழை உயர்த்திய கவாஸ்கருக்கு 'Thumps up' சார்பில் ஒரு மாருதி கார் வழங்கிவிட்டோம்!

பம்பாய் கிரிக்கெட் சங்கம் லக்ஷ ரூபாய் நிதியளிப்பு வழங்கவிருக்கிறது! இன்னும் பலரது நன்கொடைகள் தொடர்கின்றன. அதிர்ஷ்டச்சக்கரம் களில் கவாஸ்கரின்பக்கம் திரும்பிவிட்டது! இனி அவர் வைத்தது வரிசைதான்! டெஸ்டில் அதிக ரன்களைக் குவித்த இந்தியர் மன்காடின் ரிகார்டையும் முறியடித்துவிட்டார் கவாஸ்கர்! இன்னும் அவர் முறியடிக்க என்ன ரிகார்டுகள் பாக்கியுள்ளன?

—குண்டுமணி

படங்கள்: பாலாஜி

காப்டன் லாயிட்டுக்குத் தமிழக கிரிக்கெட் சங்கத் தலைவர் திரு எம். ஏ. சிதம்பரம் பரிசளிக்கிறார்





# மற்றுமொரு பொற்காலம்

சேப்பாக்கம் மைதானத்தின் சரித்திரத்தில் மற்றுமொரு பொற்காலம் என்று கருதத்தக்க முறையில் சென்னை டெஸ்ட்டில் கவாஸ்கர் தமது முப்பதாவது சதத்தை எடுத்து பிராட்மனின் சாதனையை வென்றார். ஏற்கெனவே பாய்க்காட்டின் சாதனையையும் முறியடித்திருப்பதால் கவாஸ்கர் தமக்கு மட்டுமின்றி இந்தியாவுக்கும் சர்வதேச கிரிக்கெட் அரங்கில் மிக முக்கிய இடத்தைப் பெற்றுத் தந்துள்ளார். மாட்சின் கடைசி நாளன்று தமது ஸ்கோரை 236 நாட் அவுட்டுக்கு உயர்த்தினார். இந்திய பாட்ஸ்மன்களைப் பொருத்தமட்டில் இதுவே மிக அதிகமான டெஸ்ட் ஸ்கோர். கவாஸ்கரை இந்திய கிரிக்கெட் ரசிகர்கள் மட்டுமின்றி அகில உலகத்திலும் உள்ள கிரிக்கெட் அன்பர்கள் இன்று வாழ்த்திக் கொண்டிருக்கிறார்கள். கவாஸ்கரின் சாதனை எண்ணிக்கையில் மட்டுமின்றி ஆட்டத்தரத்திலும் சகலத் திறனிலும் வியந்து போற்றுதற்குரியது. சென்னை டெஸ்ட்டில் இந்தச் சாதனையை நிகழ்த்தித் தமிழகத்துக்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்பதற்காகவே டெல்லி டெஸ்ட்டுக்குப் பிறகு இந்நாள் வரை காத்திருந்தாரோ?

கவாஸ்கரின் ஆட்டம் தான் இந்தத் தொடரின் கடைசி மாட்ச் உயிர்த்துடிப்புடன் விளங்கக் காரணமாயிற்று. மழை காரணமாக இழந்த நேரம் போதாதென்று மூன்றாவது நாள் ஓர் அசம்பாவிதம் காரணமாக அரை மணி நேரம் ஆட்டம் நிறுத்தி வைக்கப்பட்டது. பிட்சில் ஜீவனில்லாத காரணத்தால் இருதரப்பினருமே முனைந்து செயல்படமுடியாது போக ஆடுவதிலேயே அர்த்தமில்லை என்று தோன்றிய தருணத்தில் கவாஸ்கர் தமது சாதனைகளை நிகழ்த்தி ஆட்டத்துக்கு விருவிருப்பூட்டினார்.

மிகக் கெட்டிக்காரரான அவர், சந்தர்ப்பச் சூழலை நன்றாகக் கணித்து அதற்கேற்பத் தமது ஆட்டத்தின் தன்மையை வகுத்துக் கொண்டார். பொறுமை காக்கிற பண்பு அவருக்கு இருப்பதால் கல்கத்தாவில் செய்தது போல் சாகசம் காட்டி பாட்டை வீசாமல் பந்து தம்மருகே எழும்பக் காத்திருந்து அதைச் சக்தியுடன் தட்டிவிட்டுத் திசை திருப்பினார். அவர் ஆடிய 644 நிமிஷங்களிலும் அவருக்குப் பந்து அடிமையாகப் பணி செய்தது.

இம்முயற்சி கவாஸ்கரின் பிராபல்யத்தை அதிகரித்ததோடு இந்தியா இந்த மாட்சில் தோல்வி அடையாமலும் காத்தது. கவாஸ்கர் நான்காவது பாட்ஸ்மனாகத்தான் மைதானத்தினுள் நுழைந்தார். ஆனால் முதல் இரண்டு பாட்ஸ்மன்கள் ரன் எடுக்காமலேயே அவுட் ஆகி விட்டதால் கவாஸ்கர் ஓபனிங் பாட்ஸ்மன் போலத்தான் செயலாற்ற வேண்டி இருந்தது. அவர் கிரீஸ் நோக்கி நடந்தபோது இந்திய அணியின் மற்றொரு மாபெரும் தோல்வி மனக்கண் முன்னால் நின்றது. ஆனால் வெகு சீக்கிரமே அவர் நம்முடைய எல்லாப் பயங்களையும் துடைத்து எறிந்து விட்டார். தமது கட்சி பத்திரமான நிலையை எட்டிவிட்டது என்று தெரிந்த பிறகே மட்டையைச் சற்று வீசி சில துரித ரன்கள் எடுத்து நாலாவது நாள் தமது ஸ்கோரை 149-க்குக் கொண்டு சென்றார். மறுநாள் புகழ்மொழிகள் காதுகளை நிரப்பத் தொடர்ந்து அமைதியாக ஆடித் தமது ஸ்கோரை 236-க்கு உயர்த்தினார். 8 விக்கெட் நஷ்டத்துக்கு 451 ரன்கள் என்ற கட்டத்தில் கபில்தேவ் டிக்ளேர் செய்தார். கவாஸ்கரின் இரு செஞ்சுரி பார்ட்னர்ஷிப்களின் போது ரவிசாஸ்திரி 72-ம் கிர்மானி 63-ம் எடுத்தனர்.

உலகக் கோப்பைப் பந்தயத்தில் வென்று பெற்ற பெரும்புகழை அக்டோபர் முதல் டிசம்பர் முடிய மூன்று மாதங்களில் அடியோடு இழந்து விட்டார் கபில். மேற்கிந்தியர்களும் கிளைவ் லாயிட்டும் தங்கள் கௌரவத்தை ஒருநாள் சர்வதேச மாட்ச்களில் திரும்பப் பெற்றதோடு சம்பிரதாய டெஸ்ட் மாட்ச்களில் தங்கள் மேன்மையை மறுபடி நிரூபித்துள்ளனர். நமக்குக்கிடைத்த ஒரே ஆறுதல் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொடர்ந்த கவாஸ்கரின் அபாரமான சாதனைகள்தாம்.

-பி. என். சுந்தரேசன்

ஆங்கிலக் கட்டுரையின் தமிழ் வடிவம்:
—குட்டிகிருஷ்ணன்

புகைப்படம்: பாலாஜி

# இருக்கவே இருக்காது!

ஆனால் உண்மை. விலைவாசி ஜுரம் போல ஏறும் இந்த நாள்லே
நியூட்ரமுல் 7 ரூபா விலை குறைஞ்சிருக்கு.

# எதை விட ?

மலைபோல விலையேறிக் கிடக்கும் இதர மால்ட்- கோக்கோ பானங்களை
விடன்னு சொன்னா போதாதா? பேரை வேற சொல்லணுமா?

# அப்படியும் ISI தரமா ?

ஆமாங்க. வேற எந்த கோக்கோ பானத்துக்கும் தரத்துக்கான
இந்த ISI முத்திரை கிடையாது.

# அடேயப்பா! ஆனால் எப்படி ?

விளம்பர-விற்பனைச் செலவுகளிலே சிக்கனம். புதிய உற்பத்தி உத்திகள்...
எல்லா சேமிப்பு லாபமும் உங்களைத்தான் சேருது.

# அபாரம்!

இந்திய கூட்டுறவுங்களால என்னவெல்லாம் சாதிக்க முடியுது
பார்த்தீங்களா? லாபமே குறியா இருக்கற வெளிநாட்டுக் கூட்டுங்க
செய்வாங்களா? செய்யத்தான் முடியுமா?

| | |
|---|---|
| நியூட்ரமுல் | ரூ. 13.34 |
| போர்ன்விடா | ரூ. 20.48 |
| மால்டோவா | ரூ. 19.70 |
| பூஸ்ட் | ரூ. 20.70 |

அக்டோ '83 நிலவரப்படி, 500 கி. நாக்:ப்ளெக்ஸிபுள் பேக்குகளுக்கான அனுபோக. உச்ச விலைகள். வரிகள் தனி.




அமுல் படைப்பு

## நியூட்ரமுல்

daCunha/GCM/99/83/TM

கல்கி



1984 ஜனவரி 8
ருத்ரோத்காரி மார்கழி 24
மலர் : 42 இதழ் : 23



# தாழ்த்தப்பட்டோரின் நேசன்!

உண்மைகளைக் கூறியதற்காகச் சிலுவையில் அறையப்பட்டிருக்கிறார் சென்னை ஐ. ஐ. டி. இயக்குனர் பி. வி. இந்திரேசன்.

உண்மை 1: விஞ்ஞானிகளும் உயர் கல்வியாளர்களும் பணியாற்றுவதற்குரிய சாதகமான சூழல் இந்தியாவில் நிலவவில்லை. இதனால் அறிவாளிகள் அயல் நாடுகளில் போய்ப் பணியாற்றுவது அதிகரித்து வருகிறது.

உண்மை 2: கல்வித்துறை சுதந்திரமாக இயங்க முடியாமல் அரசியல் வாதிகளின் தலையீடு அதிகரித்து வருகிறது.

உண்மை 3: தாழ்த்தப்பட்டோருக்கென அமைக்கப்பட்ட நாடாளுமன்றக் குழுவினர் தாழ்த்தப்பட்டவர் நலன் கருதி ஐ. ஐ. டி. போன்ற உயர் கல்வி நிறுவனங்களில் கல்வியின் தரம் குறைக்கப்பட வேண்டும் என்கின்றனர்.

உண்மை 4: மேற்படி அணுகுமுறை தவறு என்று சுட்டிக் காட்டியதற்காக இந்திரேசனைத் தாறுமாறாக அக்குழுவினர் வைதனர்.

இந்த உண்மைகளை ஐ. ஐ. டி. பட்டமளிப்பு விழாவின் போது பாரத ராஷ்டிரபதி ஜெயில்சிங் முன்னிலையிலேயே தைரியமாக எடுத்துரைத்ததற்காக மத்திய அரசின் அதிருப்தியைக் குறைவின்றிச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார் இந்திரேசன்.

இந்திரேசன் தாழ்த்தப்பட்டோருக்கு இடஒதுக்கீடு செய்வதைத் தவறு என்று சொல்லவேயில்லை. அதை அமல்படுத்தும் முறையில்தான் குறை காண்கிறார். மூதாதையர் செய்த தவறுகள் காரணமாக இன்றைய தலைமுறையினருக்கு ஒரு குற்ற உணர்வு இருக்கிறது. எனவேதான் தாழ்த்தப்பட்டவருக்கு இட ஒதுக்கீடு செய்ய முன்வந்திருக்கிறோம். ஆனால் அதை எப்படிச் செய்வது? ஜாதி அடிப்படையில் இட ஒதுக்கீடு செய்வதைக் காட்டிலும் பொருளாதார ரீதியில் பின்தங்கியவருக்கு இட ஒதுக்கீடு செய்வதை விடவும் கல்வி அடிப்படையிலேயே கல்விக் கூடங்களில் இட ஒதுக்கீடு செய்யலாம் என்கிறார். அதாவது கல்வி பெறாத பெற்றோர் அல்லது தாத்தா பாட்டிகளை உடையவர்களுக்கு என இட ஒதுக்கீடு செய்யலாம்; மற்றவர்கள் தகுதி அடிப்படையில் இதர இடங்களுக்குப் போட்டியிடலாம். அனைவருக்கும் பொதுவான தர்ம நியாயமான கருத்து இது. பிறப்பினால் ஏற்றத்தாழ்வோ சலுகையோ இல்லை என்பதை வலியுறுத்தி, கசப்புணர்வுகளை அறவே நீக்கிவிடக் கூடிய உபாயம்.

தாழ்த்தப்பட்டவர்களின் தலைவர்களாகத் தங்களை வர்ணித்துக் கொள்கிறவர்களுக்குச் சில யோசனைகளைக் கூறுகிறார் இந்திரேசன்: என்றென்றும் இச்சலுகைகள் நீடிக்கும் என்று கருதுவது தவறு; இட ஒதுக்கீடு சலுகைகளைப் பெற்றுத் தந்ததோடு தங்கள் கடமை முடிந்ததாக இவர்கள் கருதுவதும் சரியல்ல. தாழ்த்தப்பட்டோரின் நலன் கருதி கல்லூரிகளில் கல்வியின் தரத்தைக் குறைக்க இத்தலைவர்கள் முயல்கிறார்கள். மாறாக, தாழ்த்தப்பட்டோரின் கல்வித்தரம் உயரவே இவர்கள் பாடுபடவேண்டும். அதற்கு விசேஷ வகுப்புகள், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தொடங்கப்பட வேண்டும்.

இந்திரேசன் தாழ்த்தப்பட்டோரின் நேசன் என்பதைப் புரிந்து கொண்டு அவரைப் பாராட்ட மத்திய அரசு முன்வந்திருக்கவேண்டும். மாறாக அவருக்குக் கண்டனம் தெரிவிக்கப்பட்டிருப்பதாக மத்திய கல்வி அமைச்சர் நாடாளுமன்றத்திலே அறிவிக்க நேர்ந்தது தேசத்தின், குறிப்பாகத் தாழ்த்தப்பட்டோரின் துரதிர்ஷ்டம்.

# கனகத்தின் இடம்

அனந்த் கிருஷ்ணமூர்த்தி

"தகப்பனுர் ஸ்தானத்திலே நான் இருந்து தாரை வார்த்துத் தரது முறையாகாது. பெத்த தகப்பனுர் இருக்கறச்சே அவரே வந்து, நீயும் கூட இருந்து பெண்ணை கன்னிகாதானம் பண்ணிக் கொடுக்கறது தான் சாஸ்திரப் பிரகாரமான சம்பிரதாயத்துக்கு ஒத்துப் போகும். வருஷம் எத்தனையானு என்ன? பந்தம் விட்டுப் போயிடுமா? காளியாபாதுக்கு நானே போய் உன் கணவரைக் கையோட அழைச்சிண்டு வந்துட மாட்டேனு?''

உடம்பு சரியில்லாமல் எதிரே கட்டிலில் படுத்திருக்கின்ற சபேசன் சற்று முன்னுல் வனஜாவின் கல்யாணத்தைப் பற்றிப் பேச் செடுத்த போது சொன்ன வார்த்தைகள் கனகத்தின் மனசில் சுழன்று கொண்டிருக்கின்றன.

புதுதில்லியில் ஒரு தனியார் நிறுவனத்தின் உத்தியோக ஏணியில் கீழ்ப்படியிலிருந்து சளியாத உழைப்பினுல் உச்சிப்படிக்கு உயர்ந்து ஓய்வும் பெற்று விட்டவர் சபேசன். தனிக்கட்டையாகவே தரும கைங்கரியங்களில் ஈடுபாட்டுடன் பங்கு கொண்டு வருகிறவர். மனிதாபிமானமும் சுறுசுறுப்பும் மிகுந்த ஒரு சமுதாய மனிதரை மருந்தும் கஞ்சியுமாய்க் கட்டிப் போட்டு வைத்த மாதிரி இருக்கிறது இப்போது.

'இனிமே இந்த வீட்டு வாசப்படி ஏறினுயோ தெரியுஞ்சேதி' என்கிற நிர்த்தாட்சண்யமான எச்சரிக்கையுடன் ஏறக் குறைய இருபது வருஷங்களுக்கு முன்னுல் கணவர் வீட்டுக் கதவு கடைசியாய் அடைபட்டு விட்டபிறகு, கனகத்துக்கும் இரண்டு வயது கணேசனுக்கும், ஆறு மாதக் கைக்குழந்தை வனஜாவுக்கும் சபேசன் வீட்டுக் கதவுதான் திறந்து கொண்டது. வேறு போக்கிடம் இல்லாத அப்போதைய மன உளைச்சலில் அவள் செய்ய நினைத்த நல்லதங்காள் தனம் நிறைவேருதபடி தடுத்து நிறுத்தி, தன் கைத்தொழிலேயேநம்பிப் பிழைக்க அவளுக்குத் துணிச்சல் தந்ததே சபேசனின் பெருந்தன்மைதான். குழந்தைகளிடம் அவர் காண்பித்த பிரியத்தில் அவை அவரிடம் மிகவும் ஒட்டிக் கொண்டு விட்டன. பாவம், அன்புக்கு ஏங்கின குழந்தைகள்.

'இவர் பேசினதைப் பார்த்தா, பெத்தவரே வந்து பெண் கல்யாணத்தை நடத்திக் கொடுத்தாத்தான் சாஸ்திர நிபந்தனை பூர்த்தியாகும் போலே இருக்கே...' கனகத்தின் மனம் அலைபாய்கிறது.

அவரே கதின்னு நான் திரும்பிப் போயிருந்தாலும் நானும் குழந்தைகளும் நடுத்தெருவிலே நின்னுருக்க மாட்டோங்கறது என்ன நிச்சயம்? என் அம்மாவுக்கு ஏற்பட்ட அதே கதிதானே ஏதோ பரம்பரை பந்தம் மாதிரி எனக்கும் ஏற்பட்டுப் போச்சு அப்போ? என் அப்பா என் அம்மாவை இரண்டு குழந்தைகளோட தனியா தவிக்க விட்டுட்டு எங்கேயோ கண்காணுத இடத்துக்கு ஓடிப் போனப்பறம் அவளுந்தான் கண்ணை மூடற வரைக்கும் எத்தனை கஷ்டப்பட்டிருக்கா? தன் குடும்பத்தைத் தாங்கறதே பெரும்பாடாயிருக்கறச்சே தங்கை குடும்பத்தையும் சேர்த்து எப்படித் தாங்கறதுங்கற நெருக்கடியினுலே தானே மணி அண்ணுவும் எங்களை எப்படியும் பிழைச்சுப் போங்கோன்னு கைகழுவி விட்டுட்டான்? அந்த நிலைமையிலே நான் அதிகக் கஷ்டப்படாம — ஏன் — சௌக்கியமாகவே கூட இருக்கறதுக்கு ஒரு நல்ல இடம் கிடைச்சதினுலே மனசுக்கு இங்கேயே ஒரு லயிப்பு ஏற்பட்டுடுத்துன்னு சொல்லலாமா? அப்படிச் சொல்லி நான் செஞ்ச காரியத்தை நானே நியாயப்படுத்திக்க நினைக்கறது நியாயந்தானு?...

அவரைப் பத்தின நினைப்பு இப்போ ஏன்



என் மனசைப் போட்டு இப்படி அலைக்கழிக்கறது? தன் கையாலே தாலி கட்டினவன் பேரிலே தாட்சண்யம் இல்லாட்டாலும் தான் பெத்த குழந்தைகளுக்காவது ஒழுங்கான தகப்பனாரா நடந்துக்கணுங்கற சமூக நியதியைப் பத்தி அவரும் கவலைப்படல்லே, சமூகமும் கவலைப்படலையேன்னு அப்போ ஆத்திரப்பட்டு, அவரை விட்டு ஒதுங்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கும் ஆட்பட்டு, இத்தனை வருஷம் ஆனப்பறம் இப்போ ஏன் மனசு பிடுங்கித் தின்கிறது? சமூக நியதிதானே சம்பிரதாயமும் சாஸ்திரமும்? பின்னே, புருஷனோட தகாத காரியங்களையெல்லாம் தாங்கிண்டு நளாயினியையும், கண்ணகியையும் போல் சகிப்புத் தன்மையோட நடந்துக்கணும்னு நான் ஆரம்பத்திலே பட்ட பாட்டுக்கெல்லாம் ஏன் பலனில்லாமல் போச்சு? புருஷனைத் தலைப்பிலே முடிஞ்சு வெச்சுக்கத் தெரியாத அசடாயிருந்ததனாலே எனக்கு நானே வரவழைச்சுண்ட நிலைமைதானே இது?....

ஒருகால் நிறைய வருஷம் ஆயிட்டதனாலே அவர் பேரிலே இருந்த ஆத்திரமும் வெறுப்பும் கரைஞ்சு சமனப்பட்டுடுத்தோ?

ஏன் நடக்காது? இவர் போய்க் கூப்பிட்டு ஒருவேளை அவரும் பழசை மறந்து புறப்பட்டு வந்துட்டா...? ஹூம்... வெறும் குதிரைக் கொம்பு யோசனைதான்! மலையா நாம இருக்கற இடத்துக்குப் பெயர்ந்து வரும்?... ஆனானப்பட்ட ஸ்ரீராமனே சீதைக்கு அக்னிப்பரீட்சை வெச்சார்னு கதை கேட்டிருக்கோமே... அப்படிப் பரீட்சை பண்ணி அழைச்சிண்டு போனப்பறமும் ஏதோ புறம்போக்குப் பேச்சைக் கேட்டு, வயிறும் பிள்ளையுமா இருந்தவளை அவர் வனத்திலே கொண்டு விடச் சொல்லிட்டாரே... அவளையும், குழந்தைகளையும் காப்பாத்தின வால்மீகி மகரிஷி மாதிரி தானே சபேசன்மாமாவும்?...

"அம்மா" – அழைப்புக் குரல் கனகத்தின் நினைவலையைக் கலைக்கிறது. வனஜா தான். கல்லூரி முடிந்து வந்திருக்கிறாள்.

"அப்பாவுக்கு இப்போ எப்படி அம்மா இருக்கு?"

தன் அப்பாவையே சரியாகப் பார்த்தறியாத குழந்தை இவள். இவரையே அப்பான்னு கூப்பிட்டுப் பழகிடுத்து...

"என்ன அம்மா, பதிலையே காணோம்?"





## அருள்வாக்கு

இப்போது நாம் எல்லோரும் நம் நிஜஸ்வரூபத்தை விட்டுவிட்டு வேஷத்தில் இருக்கிறோம். நமக்கு வேண்டியவர்களை விட்டு விட்டால் தவிக்கிறோமே. நம்மையே விட்டு விட்டதற்கு எவ்வளவு தவிக்க வேண்டும்! நம் ஆனந்த ஆத்ம ஸ்வரூபத்தோடு, அதுவே நாமாக எப்போது கலக்கப் போகிறோம் என்ற தவிப்பும், அதைப் பற்றிய நினைப்பும் நமக்கு ஸதா இருக்க வேண்டும். பரமாத்மாவுடன் கலப்பதற்காக இப்படிச் சகிக்க முடியாமல் தவிப்பது தான் உண்மையான பிரேமை. அந்தப் பிரேமைக்குத்தான் பக்தி என்று பெயர்.

இதற்கு முதல் படியாக வெளிப் பூஜை, கோவில் வழிபாடு எல்லாம் வேண்டியிருக்கிறது. உலக நினைப்பே ஓயாத காரியமாக இருப்பவர்களுக்கு ஆரம்பத்தில் இவைதான் பரமாத்மாவை நினைக்கச் சாதனங்களாகும். இந்தக் கட்டத்தில் ஸ்வாமி கோவிலில் மட்டுமின்றி எல்லா இடத்திலும் வியாபித்திருக்கிறார், நாமும் கூட அவரே தான் என்று நாம் உணராவிட்டாலும் பரவாயில்லை. மூல விக்கிரகத்தில்தான் ஸ்வாமி இருக்கிறார் என்று நினைத்துக் கோவில் தூணிலேயே நாம் பிரசாதக் கையைத் துடைத்து விட்டு வந்தாலும் பாதகமில்லை. மூல விக்கிரகத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயப்பட்டு அங்கே கையைத் துடைக்காத அளவுக்கு வந்திருக்கிறோமல்லவா? ஸ்வாமி இல்லவே இல்லை என்று நினைக்காமல், எங்கேயோ ஓரிடத்திலாவது ஸ்வாமி இருக்கிறார் என்று பயபக்தியுடன் ஆரம்பித்தாலே போதும் – சிரத்தை தளராமல், நம்பிக்கை மாறாமல், அப்பியாசம் செய்து கொண்டேயிருந்தால் நாளாவட்டத்தில் ஸ்வாமி எங்கும் இருக்கிறார், எல்லாமாக இருக்கிறார் என்பது புத்திக்குப் புரியும். புத்திக்குப் புரிவது அனுபவமாக ஆவதற்கு, ''என்னையே எனக்குக் கொடு'' என்று பிரார்த்தித்துக் கொண்டேயிருக்க வேண்டும். ஞானாம்பிகை கிருபை செய்வாள்.

— ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய ஸ்வாமிகள்

சபேசனே இப்போது கண்களைத் திறந்து, ''வந்துட்டியா குழந்தே?'' என்கிறார் வாஞ்சையோடு. ''கணேசன் இன்னும் ஆபீஸ் விட்டு வரல்லியா?''

''வந்துட்டான்.'' என்றவாறே அருகில் போய் ஆதூரத்துடன் அவருடைய நெற்றியில் கையை வைத்துப் பார்க்கிறாள் வனஜா. ''ஜுரமே இல்லை.''

கணேசன் அருகே வந்து அவரைப் பார்த்துக் கொண்டு மௌனமாய் நிற்கிறான்.

''காலம்பற சொன்னேனே கணேசா, காசியாபாத் போக எப்பல்லாம் பஸ் இருக்குன்னு பார்த்துண்டு வரச்சொல்லி... செஞ்சியா?''

''உங்க உடம்பு முதல்லே நன்னா குணமாகட்டும். இப்போ உங்களுக்கு ஓய்வுதான் முக்கியம்னு டாக்டர் சொல்லியிருக்கார்..''

திறந்தே இருக்கும் வாயிற்கதவு சப்திக்கப் படுவது கேட்கிறது. கணேசன் போய்ப் பார்க்கிறான்.

வெளுத்த தலையாய் ஒருவர் நிற்கிறார். வெளியே ஓர் ஆட்டோ.

''கனகத்தோட பிள்ளை கணேசன் தானேடா நீ?''

''ஆமாம். நீங்க?''

''நான் தான் உன் மாமா மணி. நீ இப்போ உடனே என்னோட கிளம்பணும்!''

''என்ன விஷயம்? உள்ளே வந்து பேசுங்கோ.''

மகனைத் தொடர்ந்து வருகிற மனிதரைக் கனகம் பார்க்கிறாள். ''யாரு: அண்ணாவா. ஏது இப்படி இந்தப் பக்கம் அத்திப் பூத்தாப் பலே...''

''வாங்கோ உட்காருங்கோ'' என்கிறார் சபேசன்.

''நான் உட்கார வரல்லே. கணேசனோட தகப்பனார் காசியாபாதிலே இன்னிக்கி மத்தியானம் காலமாயிட்டார். ரெண்டாந் தாரத்துக்கிட்டே அவருக்குப் பிள்ளையே இல்லே. கணேசன் போய்த்தான் காரியம் நடக்கணும்.''

''என்ன அண்ணா சொல்றே நீ?'' கனகம் விக்கித்துப் போகிறாள். கழுத்தில் கிடக்கும் மஞ்சள் கட்டின தாலிச்சரட்டைத் தொட்டுக் கொண்டு விசும்புகிறாள். மனசுக்குள் ஏதோ கட்டடம் இடிந்து சரிகிறது.

''கணேசா, செலவுக்கு எடுத்துண்டு உடனே கிளம்பு'' என்கிறார் சபேசன்.

''நானும் இதோ வந்துட்டேன். நீயும் புறப்படு... உன்னைப் பெத்தவரைக் கடைசியா...'' என்று கனகம் இரைகிறாள்.

''நாம அங்கே போய்த்தான் ஆகணுமா அம்மா?'' வனஜா கூர்மையாகக் கேட்கிறாள்.

''ஏன்?''

''கொள்ளி போடறதுக்குப் பிள்ளை தானே முக்கியம்?''

''நமக்கும் கடமை இருக்கே?''

''எது கடமை! காலமானவர் கடமையைக் கடைப்பிடிச்சவர்தானா?''

''வனஜா'' – கோபமே வராத சபேசன் கூட சக்தியைத் திரட்டிக் கொண்டு, ''காலமானவருக்குக் கடைசி மரியாதை செலுத்

## வாரம் ஒரு புத்தகம்

- எபிடியாஸ்கோப் செய்வது எப்படி? — படம் வரையும் போது வெளிக்கோடுகளைச் சரியான முறையில், அமைப்பு மாருமல் வரைய உதவும் இந்தக் கருவியை வீட்டிலேயே செய்யலாம்.
- விரல் ரேகை ஓவியங்கள் வரையும் விதம்.
- இந்தியன் இங்க்கைப் பயன்படுத்தவும் பாதுகாக்கவும் சில குறிப்புகள்.
- தூரிகைகளைப் பாதுகாக்கும் முறைகள். தூரிகையின் நுனியில் உள்ள முடிகள் உதிர்ந்த பின்னும் அதற்கு உபயோகம் உண்டு... அதன் முனையைப் பட்டையாகச் சீவிவிட்டு சித்திர எழுத்துக்கள் எழுதலாம்.
- ஓவியரை வரைந்த ஓவியர் — ஓவியர் ஆழியை ஓவியர் பெனிடிக்ட் நான்கே நிமிடங்களில் வரைந்த சம்பவம்.
- ஒரு முறை பிக்காஸோவின் வீட்டில் திருடர்கள் புகுந்து பணத்தையும் நகைகளையும் கொள்ளையடித்து விட்டனர். பிக்காஸோவுக்கு ரொம்பக் கோபம்! செல்வம் திருட்டுப் போனதற்காக அல்ல: அவருடைய ஓவியங்களில் ஒன்றைக் கூடத் திருடிக் கொண்டு போகவில்லையாம்!
- சில ஓவியர்கள் சிற்பங்கள் வரையும் போது மனித முக ஜாடைகள் தெய்வத் திருவுருவங்களில் படிந்து விடும்; ஆனல் சில்பி வரையும் சித்திரங்களில் அவை 'சிற்பமாகவே' காட்சியளிக்கின்றன. இதுதான் அவருக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வேறுபாடு.

இத்தகைய சுவையான சம்பவங்களையும், உபயோகமான உதிரித் தகவல்களையும் தரும் 'ஓவியர் உலகம்' முதல் தொகுதியின் அட்டையை அலங்கரிப்பது — சில்பி வரைந்த சித்திரம்தான்! நூலாசிரியர் ஓவியர் ஆழி ஏற்கெனவே பல ஓவியப் புத்தகங்களின் மூலம் அறிமுகமானவர். தொடர்ந்து வர இருக்கும் தொகுதிகளிலும் ஆழி தம் அனுபவங்களை இளம் ஓவியர்களுடன் பகிர்ந்து கொள்வார்.



✕ ஓவியர் ஆழி - பெனிடிக்ட் வரைந்தது

# ஓவியர்களுக்கு உதிரித் தகவல்கள்

-எஸ். ஆர்.

ஓவியர் உலகம்—பதிப்பாளர்: சித்ரகலா பதிப்பகம், ஆழியூர்—611 117. விலை: ரூ. 4.50.

---

றதுதான் உன்னுடைய கடமை'' என்று இரைகிருர்.

''கடமைன்னு சொல்லாதீங்கோ. சம்பிரதாயம் இல்லாட்டா நாகரீகம்னு வேணுச் சொல்லுங்கோ...''

கனகம் நிமிர்ந்து தன் மகளை ஏற இறங்கப் பார்க்கிருள்... ''தர்க்கம் பண்றதுக்கு இது சமயமில்லே வனஜா. கடமையை உன் அப்பா கடைப்பிடிச்சாராங்கற கேள்வி அவரே காலமாயிட்டப்பறம் இப்போ அனுவசியம். கணேசனுக்குத்தான் கர்மா பண்ண சாஸ்திர பூர்வமான முதல் அதிகாரம். மலைமாதிரி பெத்தபிள்ளை இருக்கறச்சே அவருக்கு கோவிந்தாக்கொள்ளிதான் வாய்ச்சதுங்கற அவப்பெயர் வேண்டாம்...''

''கணேசன் ஏன் போகணும்னு நான் கேட்கவில்லையே. காலமானவர் என்னையும் பெத்தவர்ங்கிற நிஜத்தையும் நான் மறுக்கல்லே. என்னைப் பொறுத்த வரைக்கும் இவர்தான் எனக்கு அப்பா. இவர் இப்போ இருக்கற நிலைமையிலே இவரைக் கவனிச்சுக்கறதுதான் எனக்கு முதல் கடமை.'' வனஜா சபேசனின் கால் மாட்டில் போய் உட்கார்ந்து கொள்கிருள்.

கனகம் தன்னைச் சுதாரித்துக் கொண்டு தமையனுக்கும், தனயனுக்கும் பின்னல் போகத் தொடங்குகிருள்.

சட்டென்று ஏதோ தீர்மானத்துக்கு வந்தவளாக, ''மணி! ஆட்டோவிலே மூணு பேர் போக முடியாதில்லையா?'' என்றுகேட்கிருள்.

''ஆமாம். கணேசன்தானே முக்கியம். நீ பின்னுடி பஸ்ஸிலே வந்துடேன்'' மணி விரைவாய் நடந்து ஆட்டோவில் ஏறுகிருர்.

கணேசன் தயங்கி நின்று தன் தாயைப் பார்க்கிருன். பிறகு, ''கூடக் கொஞ்சம் பணம் கொடுக்கறேன்னு டிரைவர் ஒப்புத்துப்பான். வாயேன்'' என்கிருன்.

''இல்லே கணேசா. நான் வரப் போறதில்லே. என் செய்கைக்கும் ஒரு நியாயம் வேணும். அதுக்காகத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டேன். சித்த இரு'' கனகம் மளமளவென்று தன் கழுத்திலிருந்து மஞ்சள் சரட்டைக் கழற்றுகிருள். ''இந்தா. உன் அப்பா நெஞ்சிலே நெருப்பு வைக்கறபோது இதையும் அதுலே போட்டுடு'' மகனின் கையில் அதைத் திணித்து விட்டு அவன் பதிலுக்குக் காத்திராமல் திரும்பிக் குளியலறையை நோக்கி அவள் நகர்கிருள்.

''வனஜா, நீயும் ஒரு ஸ்நானத்தைப் பண்ணிப்பிடு. நமக்கு ஸ்நானப் பிராப்திதான் உண்டு.''

சபேசன் அசையாமல் படுத்திருக்கிருர். வாசலில் ஆட்டோ புறப்பட்டுப் போகும் சப்தம் தேய்ந்து ஒய்கிறது.


அபிமானவல்லி
கி.ராஜேந்திரன்



# அத்தியாயம் 10

## சுரங்கப்பாதை!

திருவாசல்முதலி பணிவாக ஓர் அடி முன்னால் எடுத்து வைத்து ஆதித்தனை வணங்கினான். "மன்னவா! இவர்கள் கள்வர்கள். சோழ நாட்டின் விலை மதிக்கமுடியாத பொக்கிஷங்களைக் கடத்திக்கொண்டு போகப் பார்த்தார்கள். நல்லவேளை சந்தேகத்தின் பேரில் தடுத்து நிறுத்தி சோதித்ததில் அகப்பட்டுக் கொண்டார்கள்!" என்றான்.

"அப்படியா!" என்று அதிசயித்தான் ஆதித்தன். "என்ன திருடிச் செல்லப் பார்த்தார்கள்? பொன்னையா, மணியையா, முத்தையா?"

"இவை ஏதாகிலும் என்றால் பொறுத்துக் கொள்ளலாமே. கலைப்பொருள்களை அல்லவா கொள்ளையடித்துப் போகிறார்கள்!"

"அடடா! அது செல்வத்தைக் கொள்ளையடிப்பதை விடவும் பெரிய குற்றமாகச் சோழ நாட்டில் கருதப்படுகிறதாயிற்றே!"

"அதிலும் எப்பேர்ப்பட்ட கலைப் பொருள்கள், பிரபோ! என்ன மாயம் செய்தார்களோ, எப்படித்தான் காவலை மீறி மாளிகையினுள் புகுந்தார்களோ அறியோம். ராஜ நர்த்தகியின் விலைமதிக்கவொண்ணு ஓவியங்கள் பலவற்றைக் கொள்ளையடித்துப் போகிறார்கள்!..."

"என்னது அபிமானவல்லியின் மாளிகையில் திருடர்களா!" என்று கர்ஜித்து கண்களை ரத்தச் சிவப்பேற உருட்டி விழித்தான் ஆதித்தன்.

"அடேய்! மன்னரின் காலில் விழுங்களடா" என்று அதட்டினான் திருவாசல் முதலி.

அந்நால்வரும் எப்படியோ தப்பிப் பிழைத்தால் போதும் என்கிற கருத்தில் எண்சாண் உடையாகப் புழுதியில் விழுந்து வணங்கி எழுந்தனர்.

இதற்குள், "நம்ப முடியவில்லையே. அத்தனை துணிவு இவர்களுக்கு எப்படி வந்தது?" என்று கேட்டுக்கொண்டே குதிரையிலிருந்து இறங்கிய ஆதித்தன் திருவாசல் முதலி பெட்டியிலிருந்து ஓரிரு ஓவியங்களை எடுத்துக் காட்டவும் "ஆம்.... ஐயமேயில்லை... இவை அபிமானவல்லி தீட்டியவைதாம்" என்று வியப்பு நீங்காத குரலில் சொன்னான். பின்னர் அந்நால்வரையும் சுட்டெரித்து விடுவான் போலத் திரும்பி நோக்கி மிரட்டினான்: "திருட்டுப் பயல்களா! உண்மையைச் சொல்லி விடுங்கள்! எப்படி இவற்றை அபகரித்து வந்தீர்கள்?"

மேனி நடுங்க நின்ற நால்வரில் ஒருவனை உற்று நோக்கியவாறே ஆதித்தன் திருவாசல் முதலி பக்கமாகக் கரத்தை நீட்டவும், ஒரு மிக நீண்ட சவுக்கு கைமாறியது. அதை ஒருமுறை சொடுக்க அது சர்ப்பமாகச் சீறி நெளிந்தது. அடுத்து அது மின்னல் வேகத்தில் அந்நால்வரில் ஆதித்தனால் உற்று நோக்கப்பட்ட ஒருவனைச் சுளீரென்று தாக்கிச் சுற்றி வளைத்து முன்னுக்கு இழுத்து வந்து பம்பரமாகச் சுழற்றிக் கீழே தள்ளியது.

"ஐயோ!" என்று அவன் பாதி வேதனையிலும் பாதி பயத்திலும் அலற, "உண்மையைச் சொல்கிறாயா இல்லை..." என்று ஆதித்தன் சவுக்கை மறுபடி சொடுக்கித் தெருப்புழுதியைக் கிளப்ப,...

"சொல்லி விடுகிறேன் ஐயா! சொல்லி விடுகிறேன்" என்று அலறினான் கீழே கிடந்தவன். பிறகு மெல்லத் தடுமாறி எழுந்து கும்பிட்டவாறே கூறினான்:

"மன்னவா! இவர்கள் எங்கள் மீது அபாண்டமான பழி சுமத்துகிறார்கள்... நாங்கள் தேசம் தேசமாகச் சென்று வாணிபம் செய்யும் நானு தேசிகர் என்பதை இந்தக் காவலருக்கு எத்தனையோ முறை எடுத்துக் கூறி விட்டோம். நம்ப மறுக்கிறார்கள். அரசே! தங்கள் ராஜநர்த்தகி கலைச்செல்வி அபிமானவல்லியின் புகழ் பல்வேறு நாடுகளிலும் பரவியுள்ளது. நடனத்தில் மட்டுமல்ல, சிற்ப, ஓவியத்திலும் சிறந்தவள் என்பது நாற்திசையும் அறியும். அவருடைய ஓவியங்கள் சிலவற்றை வாங்கிப் போய்ப் பிறநாடுகளில் விற்க எண்ணம். அதிலும் அபிமானவல்லி கொங்கு நாட்டிலிருந்து சோழ தேசம் வந்து குடியேறியவள். ஆதலால் அங்குள்ள செல்வந்தரிடையே இவை நல்ல விலைக்குப்போகும்!"

திருவாசல்முதலி குறுக்கிட்டான்: "மன்னவா! இவன் பெரும் மோசக்காரன்! இவனை நம்பாதீர்கள். இவர்கள் இந்த ஓவியங்களை விலைக்குத்தான் வாங்கினர் என்றால் அதற்குரிய அத்தாட்சி எங்கே? ஓலைக்குறிப்பு ஏதும் ராஜநர்த்தகியின் முத்திரையுடன் பெற்று வந்திருக்க வேண்டாமா? அதின்றி சுங்கம் எப்படி வசூலிப்பது? எந்த அடிப்படையில்? 'என்ன விலை கொடுத்தீர்கள்?' என்று கேட்டால் 'நூறு பொன் கழஞ்சுகள்' என்கிறான். சக்கரவர்த்தி! இந்த ஓவியங்கள் நூறு பொன் கழஞ்சுகள்தாம் பெறுமானம் உள்ளவையா?"

இதைக் கேட்டு ஆதித்தன் மேலும் ஆத்திரமடைந்தவனாக சவுக்கைச் சொடுக்க அது நால்வர் உடலிலும் சூட்டுக் கோல் இழுத்தது போல் எரிச்சலை உண்டாக்கி குருதியை ஈர்த்தது. "ஆ! ஐயோ!" என்ற அலறல்களைத் தொடர்ந்து திருவாசல் முதலியான தேவநாதன், "கேட்டால் தொலைந்து விட்டது என்கிறார்கள். ஒருவேளை ஓலையை எங்கோ கைதவறி விட்டு விட்டார்களோ என்னவோ" என்றான். அவன் பேச்சிலும் குரலிலும் கூட இப்போது இலேசான பரிவு எட்டிப் பார்த்தது. அவர்கள் சவுக்கடி பெற்றுப் படும் வேதனையைக் காணப் பரிதாபமாக இருந்தது போலும்.

"தேவநாதா! அப்படி கவனக் குறைவாக நடந்து கொள்பவர்கள் நானு தேசிகர்களாகவே இருக்க முடியாது!" என்றான் ஆதித்தன். "என்றாலும் இன்னொரு சோதனை

யும் வைப்போம்!... பல நாடுகளுக்கு மிகவும் மதிப்பு மிக்க பொருள்களைக் கொண்டு சென்று வியாபாரம் செய்கின்ற காரணத்தால் வழிப்பறியாளரிடம் தங்களைக் காத்துக் கொள்ள நானு தேசிகர் போர்ப் பயிற்சியும் பெற்றிருப்பார்கள். இப்போது இவர்கள் நால்வரும் என்னையே வழிப்பறியாளனுக் கருதித் தங்களைக் காத்துக் கொள்ளட்டும். வென்றால் தடையின்றி இந்த ஓவியங்களை இவர்கள் சுங்கம் ஏதும் செலுத்தாமலே எடுத்துப் போகலாம்!''

இவ்வாறு கூறித் தலையின் ஒரு நொடிப் பிலே தேவநாதனிடம் நெஞ்சுயரத்துக்கு நீண்டதொரு வாளைக் கோரிப் பெற்றான் ஆதித்தன். அதேபோன்ற கனமான வாள்கள் அந்நால்வருக்கும் தரப்பட்டன. 'என்னதானிருந்தாலும் நாம் நால்வர் இருக்கிறோம்' என்ற துணிவில் அவர்கள் வாள்களைச் சுழற்றி நாலாப் பக்கமிருந்தும் ஆதித்தனைத் தாக்க ஆரம்பித்தார்கள். தேவநாதனுக்கே கவலையாகப் போய்விட்டது. ''பிரபோ! இந்த விபரீத விளையாட்டு தேவைதானா?''என்று அவன் கேட்டு முடிக்கு முன்னரே, ''இருவாசல்முதலி! எட்டநில்!'' என்ற கட்டளை பிறந்தது. இருகரங்களாலும் வாளைப் பற்றி எல்லாத் திசைகளிலும் சக்கராயுதமாகச் சுழன்று போரிட்டான் ஆதித்தன். அந்நால்வரது கத்திகளும் ஒன்றன்பின் ஒன்றாய் சற்று நேரத்தில், தெறித்து பளபளத்து எட்டத்தில் போய் விழ, உடல் பதற கைகளைப் பிசைந்து கொண்டு பீதியுடன் நின்றார்கள்.

''இழுத்துக் கட்டுங்கள்!'' என்று உத்தரவு பிறக்கவும் கோட்டைக் காவலர்கள் தாம்பு கொணர்ந்து நால்வரையும் சேர்த்துப் படுக்க வைத்து ஒரே கட்டாகக் கட்டினார்கள்! ''தேவநாதா! இவர்களை இழுத்துக் கொண்டு வர இரு வீரர்களை என்னுடன் அனுப்பு'' என்ற ஆதித்தன் பட்டத்துப் புரவி மீது பாய்ந்தேறினான். அவன் முன்னே விரைந்து செல்ல பின்னால்

'பேசியே போரடிக்கும் இந்தப் பெரியசாமியைக் கல்லால் அடிப்போம்' என்று யாரோ என்னைப் ப்ற்றிச் சொன்னார்களாம். அவர்களுக்கெல்லாம் ஒன்று சொல்லிக் கொள்ளுவேன். நான் உங்களை விட புத்திசாலி என்று!''

—அமுதன் மைந்தன்.



இரட்டைக் கயிற்றில் உடல்களைக் கட்டி இழுத்துக் கொண்டு குதிரை வீரர்கள் அதே வேகத்தில் பின் தொடர்ந்தனர். ஒரே கட்டாய்க் கட்டியிருந்த அந்நான்கு உடல்களும் வீதியை அகழ்ந்தவாறு சென்றன; சரளைகள் அந்த உடல்களை அகழ்ந்தன!

அபிமானவல்லியின் மாளிகை வாசலில் அந்த விரைவு ஊர்வலம் வந்து நின்றது. ''அம்மணி மன்னர்பிரான் வந்திருக்கிறார்!'' என்று சேடிகள் உட்புறம் ஓடோடி சென்று கூறவும் அதற்கு முன்பாகவே ஓலக்குரல்களையும் குதிரைகளின் குளம்படி ஓசைகளையும் கட்டளை பிறப்பிக்கும் ஒலிகளையும் ஒருசேரக் கேட்டதால் குழப்பமடைந்த அபிமானவல்லி மாளிகை வாசலை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள். அங்கே அவள் கண்ட காட்சி அளித்த பயங்கரத்தால்அவள்கண்கள்அகன்று விரிந்தன. அடுத்த நொடியில் சிராய்த்து ரத்த விளாரியாகி இருந்த உடல்களருகே பாய்ந்தோடிச் சென்று மண்டியிட்டு நீண்டு தொங்கிய தன் சேலைத் தலைப்பால் அந்த ரத்தக் காயங்களை ஒற்ற ஆரம்பித்து. கூடவே இப்படிக் கட்டுப் போட்டிருக்கும் நிலையில் இத்தனை காயங்களைத் தான் ஒருத்தியாகக் கவனித்துச் சிகிச்சை அளிக்க முடியாது என்று உணர்ந்தவளாய் வேதனை மிக எழுந்து நின்று கன்னங்களை உள்ளங்கைகளால் அழுத்திக்கொண்டாள்.

''அம்மணி! தாயே! எங்களைக் , காப்பாற்று! ஆ! அம்மா! ஐயோ!'' என்று அவர்கள் புலம்ப ஆரம்பிக்கவும் கோப தாபத்தால் உடல்நடுங்கத் திரும்பி, குதிரை மீதிருந்த ஆதித்தனை ஏறிட்டு நோக்கினாள். ''பிரபோ! இது என்ன அக்கிரமம்! யார் இவர்களை இப்படிக் கொடுமைப் படுத்தியது?''

''வல்லி! உன் மாளிகைக்குள் புகுந்து திருடி விட்டுத் தப்பிக்கப் பார்க்கிறவர்களுக்கு என்ன தண்டனை கிடைக்க வேண்டுமோ அது கிடைத்திருக்கிறது!''

''பிரபோ! இவர்கள் திருடர்களா! யார் சொன்னது அப்படி?''

''இவர்களேதான் ஒப்புக் கொண்டார்கள். நானுதேசிகர்கள் என்று கூறிக் கொண்டதை மெய்ப்பிக்க முடியாதபோது இவர்கள் திருடர்கள்தாமே.''

''அரசே இவர்கள் பொய் சொல்லவில்லை. முதலில் இவர்கள் கட்டை அவிழ்த்து விட்டு வைத்திய உதவி அளிப்போம்.''

ஆதித்தன் ஏளனமாய்ச் சிரித்தான். ''வல்லி! துன்பத்தில் இருப்பவருக்கு இரங்குவது பெண்மையின் இயல்பு. ஆனால் உன் கருணை அக்கிரமக்காரர்களுக்குப் பரிந்து கொண்டு பெருகக் கூடாது. அது உனக்கே ஆபத்தாக முடியும்!''

கட்டெறிப்பவன் போல மன்னனை ஏறிட்டு நோக்கினாள் அபிமானவல்லி. ''உண்மை பேசுவோருக்கு உங்கள் ராஜநீதி ஆபத்தைத்தான் விளைவிக்கும் என்பது இவர்களைப் பார்க்கும் போதே புரிகிறது. ஐயா! ஆபத்தை எதிர்நோக்க அஞ்சுகிறவளில்லை, நான்.''



## நகர்வலம்
## நகர்வலம்
## நகர்வலம்
## நகர்வலம்

# ஆண்கள் அழகா? பெண்கள் அழகா?

- ''தமிழன், தமிழைத் தப்பாய்ப் பேசினும் பொறுத்துக் கொள்வான்; ஆனால் இங்கிலீஷைத் தப்பாய்ப் பேசினால் பொறுத்துக் கொள்ள மாட்டான். அதனால்தான் நான் இங்கிலீஷிலே பேசுவது கிடையாது!'' ஜோக் அடித்தவர் ம. பொ. சி. சங்கரதாஸ் சுவாமிகள் மன்ற விழாவில்.

- சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் ஒருவர் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தை காட்டமாகத் தாக்கினார். ஜெயலலிதா தாட்சர் ஆகி வருகிறார் என்று கேள்வித் தாள் தயாரிக்கப்பட்டதே அதற்காக அல்ல! அந்தப் பல்கலைக் கழகம், பாட நூலாக வைத்திருந்த புத்தகம் ஒரு குறிப்பிட்ட இனத்தாரைப் புண்படுத்துவதாய் இருக்கவே, திரும்பப் பெற்றுக் கொண்ட பெருந்தன்மையான செயலுக்குத் தான், இந்தத் தாக்குதல்!

- ஒரு நூல் வெளியீட்டு விழா. நிறையப் பெண்கள் கண்ணில் பட்டனர். சௌகார் ஜானகிதான் சிறப்பு விருந்தினர்—வேறு நடிகைகள் சிலரும் வந்திருந்தனர். நூலின் பெயர் 'பெண்கள் அழகாயிருக்க'. விழாவில் விவாதிக்கப் பட்ட பிரச்னை 'ஆண்கள் அழகா? பெண்கள் அழகா?'

- கிருஷ்ணகான சபாவில் கலை விழாவைத் தொடங்கிவைத்த சங்கீத நாடக அகாடமி துணைத் தலைவர் திரு. பி. வி. கிருஷ்ணமூர்த்தி ''பல கலைஞர்களை ஊக்குவித்திருக்கிறேன். 'என்கரேஜ்' பண்ண வேண்டியது என் வேலை. காலை வாரிவிட என் சகோதரர் இருக்கவே இருக்கிறார்'' என்றார். எதிரே அமர்ந்திருந்த சகோதரர் கப்புடு சிரித்து ரசித்தார். தகுதியானவரை உரிய நேரத்தில் உற்சாகப்படுத்தவும் தமக்குத் தெரியும் என்பது போல.'

—சின்ன கொலம்பஸ்

---

''வல்லி!'' என்று அதட்டினான் ஆதித்தன். ''மரியாதை குறைகிறது; எச்சரிக்கிறேன்!''

அவள் சட்டென்று தன் கோபத்தை மறைத்துக் கொண்டும் அடக்கிக் கொண்டும் புன்னகை புரிந்தாள். ஆதித்தன் அருகில் வந்து குதிரையில் ஆரோகணித்திருந்த அவனை அண்ணாந்து நோக்கி அவன் முழங்காலுக்குச் சற்று மேலாகத் தன் உள்ளங்கையை பதித்தாள். ''பிரபோ! இவர்களுக்காக நாம் ஏன் ஒருவரோடொருவர் வாக்குவாதத்தில் இறங்க வேண்டும்? உள்ளே வந்து அமருங்கள். சாவகாசமாகப் பேசலாம். வந்தவரை வரவேற்கவும் மறந்து படபடப்பாகப் பேசிவிட்டேன்; மன்னியுங்கள்.''

குனிந்த ஆதித்தன், கலங்கியிருந்த கண்களின் கவர்ச்சி குன்றவில்லை எனக் கண்டான். சற்று உயரேயிருந்து பார்த்த போது திமிர்த்தெழும் நெஞ்சகங்களின் வடிவமைப்புச் சற்றுக் கூடுதலாகவே வசீகரித்தது. மெல்லக் கீழிறங்கி அவள் கண்களை ஊடுருவினான். அவளும் இமைக்காமல் அந்தப் பார்வையை எதிர்கொண்டாள். அதே நேரத்தில் அவன், வலக்கரத்தை மெல்லப் பற்றினாள். நீண்ட தளிர்விரல்களால் அழுத்தி வற்புறுத்தலாக மாளிகையினுள் அழைத்துப்போய் சிம்மாசனத்தில் அமரச் செய்தாள். பானம் தந்து உபசரித்தாள். பிறகு நிதானமாகக் கூறினாள். ''பிரபோ! என் ஓவியங்களை மிகுந்த ஆர்வத்தோடு ரசித்த அந்தக் கலை அன்பர்களுக்கு நேர்ந்த கதியைப் பார்த்தபோது எனக்கு ஆத்திரம் எல்லை மீறி விட்டது. மன்னர் என்பதையும் மறந்து கடுமையாகப் பேசிவிட்டேன். பொறுத்தருளுங்கள்.''

''வல்லி! நான் மட்டுமென்ன செங்கோல் தவறி நடப்பவனா? என் ஆருயிர் நண்பன் விக்கிரமனையே நீதி வழுவக் கூடாது என்பதற்காகப் பாதாளச் சிறையில் தள்ளியவனாயிற்றே, நான். இவர்கள் வியாபாரிகளாக நடிக்கும் வேடதாரிகள். இல்லையென்றால் நால்வராயிருந்தும் என்னிடம் தோற்றது எப்படி? நானும் தேசிகர் எனில் வாள் சுழற்றத் தெரிய வேண்டுமல்லவா?''

''தெரியவேண்டும்தான். ஆனால் ஆதித்தனை வெல்லுமளவுக்கு வாள் சுழற்றும்

ஆற்றல் யாருக்கு உண்டு? நால்வரென்ன, இவர்கள் எட்டு பேர்களாக உங்களைச் சூழ்ந்திருந்தாலும் போரிலே வென்றிருக்கவே முடியாது. அதனால் மட்டும் இவர்கள் வியாபாரிகள் அல்ல என்று தீர்மானிப்பதா?''

''கூடாதுதான். உன்னிடம் பொருள் கொடுத்து ஓவியங்களைப் பெற்றிருந்தால் அதற்கான அத்தாட்சி ஓலை இருக்க வேண்டுமல்லவா? அதுவும் இல்லையே இவர்களிடம்!''

ஒருகணம் கலங்கிப் போனவளாகத் தோன்றிய அபிமானவல்லி அடுத்த நொடியிலேயே மறுபடி புன்னகையைப் படர விட்டாள். ''பிரபோ! இவர்கள் பொன் கொடுத்து வாங்கியிருந்தால்தானே அதற்குரிய ஓலை நறுக்கை நான் என் முத்திரையிட்டுத் தரப் போகிறேன்? இவர்களுக்கு என் ஓவியங்களை இலவசமாக அளித்து விட்டேன்!''

''என்னது!''

''ஆம் அரசே! இவர்கள் என் ஓவியங்களை ரசித்த விதத்தைப் பார்த்து மனம் மகிழ்ந்தேன். இவ்வளவு ஆர்வம் காட்டுகிறவர்களுக்குத் தந்தால் என்ன என்று பரிசாகக் கொடுத்துவிட்டேன்!''

''அப்படியானால் நூறு பொற்கழஞ்சுகள் தந்து வாங்கியதாக இவர்கள் கூறியது...''

''அதுவும் மெய்தான் பிரபோ'' என்று அபிமானவல்லி கூறியபோது, பாவங்களை முகத்தில் பிரதிபலித்தே பழகிய அந்த நாட்டிய அரசி இப்போது சஞ்சலத்தைக் காட்டாதிருக்க மிகுந்த பிரயாசைப்படுவதாகப் பட்டது ஆதித்தனுக்கு. ''நூறு பொற்கழஞ்சுகள் வழங்குவதாகத்தான் கூறினார்கள். ஆனால் நீங்களே யோசியுங்கள். அந்த விலைக்கு என் கலைப் படைப்புகளை நான் விற்க முடியுமா? அதை விடவும் இலவசமாகத் தந்து விடுவதே மேலல்லவா?''

பிரமித்தான் ஆதித்தன். சற்று நேரத்துக்குப் பிறகு மௌனம் கலைப்பவனாக, ''அபிமானவல்லி! நான் தோற்றேன்'' என்றான்.

சட்டென்று அவன் அதரங்களில் தன் பூப்போன்ற விரல்களைப் பதித்தாள். ''பிரபோ! இத்தனை பெரிய வார்த்தையைக் கூறலாமா, நீங்கள்?'' என்றாள். இதற்கு மேல் அதரங்களுடன் உறவாடத் தகுதி இல்லை என்பது போல் மனமின்றி விலகிய விரல்களைப் பற்றிக் கொண்டான். அவன் தொடர்ந்து கூறினான்: ''ஆதித்தன் தோற்பதாவது! ஒரு சிறிய தவறு நேர்ந்து விட்டது. இருத்தி விட எவ்வளவு நேரமாகும்? அவர்கள் கட்டுக்களை அவிழ்த்து விடச் சொல்லுங்கள். இன்று இங்கேயே தங்கவைத்து வைத்தியம் பார்க்கிறேன். ஒரே நாளில் குணமடைந்து கிளம்பி விடுவார்கள்.''

''அரண்மனை வைத்தியரையும் அனுப்பி வைக்கிறேன்'' என்று சொன்ன ஆதித்தனை விடைபெற்றான்.

அன்றைய நிகழ்ச்சிகளை அசைபோட்டவாறே சயனித்திருந்தான் ஆதித்தன். ''பிரபோ! மனம் விட்டுப் பேசுவதால் பாரம் குறையும் போலிருந்தால் கேட்டுக் கொள்ளக் காத்திருக்கிறேன்'' என்றாள் மஞ்சத்தில் நெருங்கி வந்தமர்ந்த இளங்கோப்பிச்சி. ஆனால் அவளுடைய திவ்விய ரூபத்தைக் கண்டும் அதனால் சிறிதும் பாதிக்கப்படாதவனாக அவன் ஆழ்ந்த சிந்தனை வயப்பட்டிருப்பதைக் கண்டு ஒரு பெருமூச்சுடன் விலகினாள். இதுபோன்ற தருணங்களில் கணவருக்குத் தொந்தரவு தராமலிருப்பதே பேருதவி என்று புரிந்து கொண்டவளாக, ஆறிக் கொண்டிருக்கும் பாலைப் பருகுமாறு கூட வற்புறுத்தாமல் ஒதுங்கினாள். அப்பாலிருந்த ஒரு சாய்மானத்தில் அமர்ந்து கண்களை மூடிக்கொண்டாள். அழைத்தால் துள்ளி எழுந்து அருகே ஓடிச் செல்லத் சித்தமாயிருப்பதாக எண்ணினாளேயொழிய சற்று நேரத்தில் கண்களை இமைகள் அழுத்தத் தன்னையுமறியாமல் உறங்கிப் போனாள். எனினும் சஞ்சலமான கனவுகள் காரணமாய் ஆழ்ந்த தூக்கமில்லை.

கனவிலே அவளை நெருங்கி வந்து உற்றுப் பார்த்த ஆதித்தன் திரும்பி நடந்தான்; நடந்து, நடந்து வெகு தூரம் போய்விட்டான். அப்படி அவன் தன்னை விட்டு விலகக் கூடாது என்று அவள் பதறித்துடித்தாள். அவள் துடிப்பைப் பார்த்து அபிமானவல்லி நகைத்தாள்! அந்தச் சிரிப்பு தூரத்து இடியோசைபோல் ஒலித்தது. திடுக்கிட்டு விழித்தாள் இளங்கோப்பிச்சி.

அப்போது மெய்யாலுமே ''நறநற'' வென்று ஓர் ஓசை கேட்டுக் கொண்டிருந்தது. ஆதித்தனை மஞ்சத்தில் காணோம்! விளக்குச் சுடர்கள் ஒன்றிரண்டு தவிர மற்றவை எண்ணெய் குடித்து முடித்து மடிந்திருந்தன. மிச்சமிருப்பவையும் அணையும் தருவாயிலிருந்தன.

விழிகளைச் சுழல விட்டபோது பள்ளியறையையொட்டியிருந்த கலைக் கூடத்திலிருந்து அந்தச் சத்தம் கேட்பது போலிருந்தது. 'மன்னர் அங்கே போயிருக்கிறாரா? எதற்கு? இந்த நள்ளிரவு நேரத்தில் அங்கே என்ன காரியம்?' வியப்பு மிக ஓசை எழுப்பாது அடியெடுத்து வைத்தாள் இளங்கோப்பிச்சி. கணவருக்குத் தனிமை தேவைப்பட்டால் இடையூறாக இருக்க அவள் விரும்பவில்லையாதலால் மெல்ல எட்டிப் பார்த்தாள்.

அங்கே ஒரு மேடை மீது பெரிய ஆடவல்லான், சிவகாமசுந்தரி சிலைகள். எத்தனையோ தடவை அவள் பார்த்து ரசித்த கனமான உலோக உருவங்கள். அவையருகே பக்கவாட்டில் நின்ற ஆதித்தன் பெருமுயற்சி செய்து அந்த மேடையையே நகர்த்திக் கொண்டிருந்தான். சிறிது சிறிதாக அது நகர்ந்து வழிவிடத் தரையில் ஒரு சுரங்கப் பாதையின் தொடக்கம் தெரிந்தது. சுவரில் இருந்த தீப்பந்தம் ஒன்றை விடுவித்து எடுத்துக் கொண்டு அதில் நிதானமாய் இறங்கினான் ஆதித்தன்.

'அந்தப்புரத்திலிருந்து வெளியேற இப்படி ஒரு வழியா? இதுவரை நானே அறியவராத இந்தச் சுரங்கப்பாதை எங்கே முடிவடைகிறது? ஒருவேளை... அப்படியும் இருக்குமோ' என்றெண்ணிய இளங்கோப்பிச்சிக்கு இதயம் சில்லிட்டது. (தொடரும்)

# வளரும் குழந்தைகளுக்குத்




**காரணம், குழந்தைகளின் விரைந்த முழுவளர்ச்சிக்கான அதிக ஊட்டச்சத்துள்ள திட உணவாகும் :.பாரெக்ஸ்.**

1. :.பாரெக்ஸ் புரதச் சத்து நிரம்பியதாகும்—உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு இது அத்தியாவசியமாகும்.

2. :.பாரெக்ஸ் வேறெந்த பிராண்டு செய்யப்பட்ட திட உணவைக் காட்டிலும் அதிக இரும்புச் சத்துள்ளதாகும். இது குழந்தைக்குத் தொற்றுநோய் எதிர்ப்புச் சக்தியையும் ஆரோக்கியமான இரத்தத்தையும் அளிக்கிறது.

3. :.பாரெக்ஸில் கால்ஷியம் மற்றும் :.பாஸ்:.பரஸ் சரியான விகிதத்தில் சேர்ந்திருக்கின்றன. ஆரோக்கியமான எலும்புகளையும் திடமான பற்களையும் பெற இவை உதவுகின்றன.

4. தவிர :.பாரெக்ஸ், குழந்தையின் மென்மையான செரிக்கும் சக்திக்கேற்றவாறு விசேஷமாக முன்கூட்டியே பக்குவம் செய்யப்பட்டதாகும்.




டாக்டர்கள் சிபாரிசு செய்வது

**:.பாரெக்ஸ்®**

வழங்குவோர் ***க்ளாக்ஸோ***

CASGLF-42 183 TM

மனசுக்குள் விழுந்து நெருடலாகிக் கொண்டிருக்கிற பிரச்சினைப் பின்னலின் முடிச்சை அவிழ்ப்பதற்கு, ஒரு ஆரம்ப முயற்சியையாவது இன்று மேற்கொள்ள வேண்டியதுதான் என்ற தீர்மானமான முடிவுடன், வீட்டுக்குள் நுழைந்து செருப்பைக் கழற்றுகிறேன். உள்ளே மாவரைத்துக் கொண்டிருக்கும் மன்னியின் குரல் ஓங்கி ஒலிக்கிறது.

''எல்லாம் காலாகாலத்திலே செய்ய வேண்டியதைச் செஞ்சிடணும். இல்லாட்டா... உங்க தங்கை மாதிரி காலத்துக்கும் கன்னியா குமரியா நிற்க வேண்டியதுதான்! ஒருவேளை... தன்னைப் போலவே மத்தவாளும் இருக்கணும்னு ஆசையோ என்னவோ...? ஹும்... யார் மனசிலே எந்த கல்மிஷம் இருக்குன்னு எப்படித் தெரிஞ்சுக்க முடியும்?''

''சியாமளாவைப் பத்தி அப்படியெல்லாம் அபாண்டமாய்ப் பேசாதே ஜெயா! நம்பளை விடச் சித்ரா மேலே அக்கறை உண்டு அவளுக்கு!''

''ஆமாம்...! இப்படி வெளுத்ததெல்லாம் பால்னு நம்பறதே உங்களுக்கு வழக்கமாய்ப் போச்சு! அப்படி அக்கறை இருந்தா, பாங்கிலே பெரிய ஆபீசரா இருக்கிறவளாலே ஒரு இரண்டாயிரம் ரூபாய் கூடுதலாய்ப் புரட்ட முடியாதா? எல்லாம் நம்ம தலை எழுத்து! நன்னா இருந்த உங்களை இப்படி வாத நோய் வந்து படுக்கையோட முடக்கிடும்னு நாம எதிர்பார்த்தோமா?.... இப்ப. பொண்ணுக்குக் கல்யாணம் பண்றதுக்குக் கூட நாத்தனார் கையை எதிர்பார்த்து நடுச் சந்தியிலே நிக்க வேண்டியிருக்கு...''

இனியும் பேச்சு முற்றிக் கொண்டுபோக வழி தராமல் கூடத்துக்குள் போய் என் வருகையை அறிவிக்கும் முகமாய்த் தொண்டையைச் செருமுகிறேன். ஸ்விட்சை ஆஃப் செய்தாற்போல உரையாடல் நிற்கிறது. உடை மாற்றிக் கொண்டு வருவதற்குள் மன்னி சூடான காப்பியுடன் எதிர் கொள்கிறாள். இந்த மாதிரிக் 'காப்பி நினைந்தூட்டுகிற' பரிவுகளில் அவள் வல்லவள்.

''மொள்ள உக்காந்துண்டு காப்பியைக் குடி சியாமளா! காலம்பற நான் அரக்கப் பரக்க அள்ளிப் போட்டுண்டு ஓட வேண்டியிருக்கு!''

நான் குடிப்பதற்குச் சற்று இடைவெளி கொடுத்துத் தொடர்கிறாள்.

''நம்ம சித்ரா விஷயமாகத்தான் உங்கண்ணாகிட்டப் பேசிண்டிருந்தேன். நீயும் தான் ஒண்டியா என்ன பண்ணுவே? நாங்க வேறே குடும்பத்தோட பாரமா வந்து உக்காந்துட்டோம். எப்படியோ... இந்தப் பொண்ணைக் கரையேத்தி அனுப்பிச்சிட்டோம்னு அப்புறம் அக்கடான்னு இருக்கலாம்!''

''இன்னிக்கு அவாகிட்டேயிருந்து கடிதாசு ஏதாவது வந்ததா மன்னி?''

—என் கேள்விக்குப் பதில் அண்ணாவிடமிருந்து வருகிறது.

# நீரைத் தேடும் வேர்கள்

எம். ஏ. சுசீலா



''கடுதாசி வேற வரணுமா என்ன? அதுதான் அன்னிக்கே துண்டு தெறிச்ச மாதிரிச் சொல்லிட்டாளே... ஐயாயிரத்துக்குக் கொறஞ்சாப் பேசாதீங்கோன்னு! நமக்குத் தெரியறது நம்ம சக்திக்கு அல்வளவு எட்டாதுன்னு!... ஆனால் பிள்ளையைப் பெத்தவாளுக்குத் தெரியலியே?''

''சும்மா ஏன் வளவளன்னு பேசிண்டே போறேள்! நாம பேருக்குத்தான் அப்பா அம்மாவேயொழிய சித்ராவுக்குச் செய்யறதெல்லாம் சியாமளாதானே! அவளுக்குத் தெரியாதா என்ன?... சித்ராவுக்கு இந்த இடம் பொருத்தமா இருக்கு...! பிள்ளையும், பார்க்க லட்சணமா இருக்கான்! நல்ல வேலையிலேயும் இருக்கான்.! நகை, பாத்திரத்திலேயும் அவா 'டிமாண்ட்' பண்ணலே! ஏதோ கொஞ்சம் 'லோன்' போட்டுப் புரட்டினா... முடிச்சிட முடியாதா? என்னவோ.... இந்தப் பொண்ணுக்குக் கன்னி கழிய உதவற புண்ணியம்... அடுத்த ஜென்மத்திலேயாவது அவளுக்குக் கண் நெறஞ்ச புருஷன் வாய்க்கணும்.''

தொடர்ந்து மன்னி பேசுவதெல்லாம் காதில் விழாத நிலையில், மௌனமாய் எழுந்து என் அறைக்குள் புகுந்து கொள்கிறேன். இவ்வளவு நேரம் ஒத்திகை பார்த்துப் பார்த்து, நான் சொல்ல எண்ணி வந்த வார்த்தைகள் உருவம் பெறாமலே மனசுக்குள் முடங்கிப் போகின்றன. கண்ணாடிக்கு முன் அமர்ந்து கூந்தலை அவிழ்த்துப் போட்டு வாருகையில், காதோரத்து நரை, எனக்கு ஏதோ ஒரு செய்தியைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. நசரந சக்கரவர்த்திக்குத்



துறவியாகச் சொல்லித் தூண்டிய அதே நரை... என்னை இப்பொழுது கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லிக் கருத்துரைக்கிறதோ?... மிஸ்டர் முகுந்துக்கும் இதே போலக் காதோர நரை இருப்பது கவனத்தில் இடறுகிறது.

முகுந்த் மீது எனக்கொன்றும் காதலும் இல்லை, காதலிக்கிற காரியத்துக்கு என் மனசும், உடம்பும் ஆயத்தமாகவும் இல்லை. ஆனால் பழகிய வரைக்கும் முகுந்த் கண்ணியமானவர் என்று மட்டும் சொல்ல முடிகிறது. இந்த நாலாண்டுக் காலத்தில் மேலதிகாரி என்ற ஹோதாவில் ஒரு வார்த்தை அதிகம் பேசி அறியாதவர்.... ஒரு மாதம் முன்பு லஞ்ச் டயத்தில் தனியே அழைத்தபோது திடுக்கிட்டுப் போகிறேன்.

''மிஸ் ஷியாமளா! ப்ளீஸ் டோன்ட் மிஸ்டேக் மீ! என்னோட நாற்பத்திரண்டு வருஷ கால வாழ்க்கையையும் இதுவரைக்கும் தனிமையிலேயே கழிச்சிட்டேன். உங்க குடும்பப் பிரச்னைகள் பத்தி ஓரளவு எனக்குத் தெரியும்! அதே மாதிரி எனக்கும் சில கடமைகள்... பொறுப்புகள்!! பகலிலே நடக்கத் துணை தேவையில்லை! அந்தி மாலையிலே... அந்திம காலத்திலே நாம ஏன் இணைஞ்சு நடக்கக் கூடாதுன்னு ஒரு ஆசை! இதுக்கு நீங்க உடனே பதில் சொல்லணும்னு அவசியமில்லே! பதில் பாஸிடிவ்வாத்தான் இருக்கணும்னு நான் வற்புறுத்த மாட்டேன்... ஆனால்... அப்படி இருக்குமானு சந்தோஷப்படுவேன்!''

வாழ்க்கையிலேயே முதன்முதலாக மனம் வேறொரு அலைவரிசையில் அதிர்ந்ததை உணர முடிந்ததும்.... ஒரு மாத காலமாக இந்தச் சுமையை நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும் தனியே தாங்கித் தவித்திருந்தும்...., இன்று இறக்கி வைக்கும் அவதியுடன் வந்த தருணத்தில்,.... சொல்லப் படுகிற விஷயத்தின் அசந்தர்ப்பமான வேளையை உணர்ந்து, சொல்லாது தவிர்த்ததும்.....!!

என் உணர்வுகளுக்கு அடுத்த வடிகால் தேடி அலைகையில், நினைவுக்குள்...ஆனந்தி.. என் அருமைத் தங்கை வந்து எட்டிப்பார்க்கிறாள்.

மறுநாள் அலுவலகம் சென்றதும் முதல் வேலையாக அவளைத் தொலைபேசியில் அழைக்கிறேன். என் குரல் எனக்கே புதிதாக, நாணமும், குழைவும், ஏந்தியதாய்.... விநோதமாக ஒலிக்கிறது.

''ஆனந்தி!... உன்கிட்டே ஒரு முக்கியமான விஷயத்தைப் பத்திப் பேசணும்!... மத்தியான 'ப்ரேக்'கிலே உங்க ஆபீஸ் பக்கத்திலே இருக்கிற ஹோட்டல் 'பாலா'வுக்கு ஒரு மணிக்கு வர முடியுமா? டிஃபன் சாப்பிட்டுண்டே பேசலாம்!''

''அக்கா!... நீ இப்போ போன் பண்ண வேண்ணு... நானே அங்கே பாங்குக்கு வந்து, உன்னைப் பார்க்கிறதா இருந்தேன்!''

''என்ன விஷயம் ஆனந்தி!''

''நேரிலே சொல்றேனே?''

மணமேடைக்கு நடை பயிலும் பெண்ணைப் போல... அச்சமும், திகிலும் கவ்வியிருக்க.., ஹோட்டல் 'பாலா'வை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறேன். தங்கைதானென்றாலும் எப்படிச் சொல்வது?... எதையென்று சொல்வது...?

கிட்டத்தட்ட இதேமாதிரியான ஒரு நேரத்தில், ஆனந்தி என்னிடம் எப்படி நடந்து கொண்டாள்?... ஆனால் அவளிடம் காதல் இருந்தது; அதைத் தயங்காமல் வெளியிடுவதற்கான துணிச்சலும் இருந்தது. அந்தஸ்து மீறிய சம்பந்தம் தான் என்றாலும் கஷ்டப்பட்டு முடித்து வைத்துவிட்டு நான் நிமிர்ந்த போது, என் கைகளைப் பிடித்தபடி, கண்களில் நீர் மல்க அவள் நின்ற காட்சி, என் நெஞ்சுக்குள் நிற்கிறது.

என்னை முந்திக் கொண்ட அந்த ஆனந்தி இன்று என்ன சொல்லப் போகிறாள்? ஆனால்... யார் என்ன சொன்னால்தான் என்ன? இந்த விஷயத்தில் என் மனம் என்ன சொல்கிறதென்பதையே புரிந்து கொள்ள முடியவில்லையே எனக்கு!

ஹோட்டல் வாசலில் ஆனந்தி, காத்துக் கொண்டு நிற்கிறாள். கருச் சுமந்திருப்பதால் களைத்துப் போய்..., ஆனாலும் களையாகத் தென்படும் முகத்தில் வியர்வை முத்துக்கள் அரும்பியிருக்கின்றன.

---

பணக்காரர் ஒருவர் தூக்கமே இல்லாமல் புரண்டு கொண்டிருந்தார். காரணம், இன்கம்டாக்ஸ் தொல்லை. திடீரென்று அவருக்கு ஞானோதயம் வந்தது.

ஒரு கடிதம் எழுதினார்:

''இத்தனை நாள் டிபார்ட்மெண்டை ஏமாற்றினேன். ஆகவே இரவெல்லாம் தூக்கமில்லை. வரித் தொகையான ரூ 50,000—க்கு இத்துடன் ஒரு செக் இணைக்கப்பட்டிருக்கிறது. இதற்குப் பிறகும் தூக்கம் வரவில்லையென்றால் பாக்கி உள்ள வரிக்கு செக் அனுப்புகிறேன்.''

டாக்டர் நடராஜன் அடித்த ஜோக்.

கே. அருணாசலம்.



# பற்குழிகளைக் கண்டான் என் மகன் ஒரு நாள்!










FOR THE GUMS

**Forhan's**

with active FLUORIDE to check tooth decay

331 F172 TAM




At eventide on a lonely road, returning after a hard day's work, a blind man bearing a lamp met a stranger who laughingly asked: "Does a blind man need light?" "Yes," replied the blind man, "my lamp is lit so that others can see."

On the palm fringed shores of Phansa, near Daman, Tatas have donated a 240 acre farm. Here, the blind are trained as farmers and tradesmen, resettled on their own farms or in co-operative endeavours.

**TATA ENTERPRISES**

TS-6153

''உள்ளே போய் உட்கார்ந்திருக்கிறது தானே ஆனந்தி!''

அவளுக்குப் பிடித்தமான பாஸந்திக்கும், மசாலா தோசைக்கும், ஆர்டர் கொடுத்து விட்டுத் திரும்பிப் பார்க்கும் போதுதான் அவள் முகம் சுரத்தின்றி இருப்பது மனத்தில் உறைக்கிறது.

''என்ன ஆனந்தி? சுஸ் எனிதிங் ராங்!''

இனியும் பொறுக்க மாட்டாதவளாய் அவள் உடைகிறாள். கணவன் பிரியமாக இருந்தாலும், அந்தஸ்துக்குப் பொருந்தாத இடத்துப் பெண்ணை மனத்தளவில் அங்கீகரிக்க முடியாமல், மாமியார் தினந்தோறும் கொடுக்கும் சொல் சாட்டைகளை வரிசையாக அடுக்குகிறாள்.

''அக்கா!... இதை உன்கிட்டக் கேட்கவே எனக்குத் தயக்கமாத்தான் இருக்கு!.... வெக்கமாய்க் கூட இருக்கு!... ஆனா!... தினம் அந்த நரகத்திலே கிடந்து பேச்சுக் கேட்கவும் மனசிலே தெம்பில்லே! மத்த மருமகளெல்லாம் வைர நெக்லஸோட வந்திருக்கிறப்ப....ஒரு வைரத் தோட்டுக்குக் கூட வழியில்லேன்னு மாமியார் குத்திக் காட்டறா! நான் ... பொறுக்க முடியாம... எனக்குச் செஞ்சு போடாம எங்கக்கா வேறே யாருக்குப் போடப் போறான்னு கேட்டுட்டேன்! அப்படி ரோசம் இருந்தாப் போய்க் கேட்டு வாங்கிண்டு வாயேங்கிறா!... நீ எப்படியாவது ஒரு லோன் போட்டு முதலிலே வாங்கிக் குடுத்திட்டா... நானும், இவருமா மாமியாருக்குத் தெரியாமே... மாசம் கொஞ்சம் பணமாய்க் கொடுத்துக் கடனை அடைச்சிடறோம்!''

''வருத்தப்படாதே ஆனந்தி!... என்னாலே முடிஞ்சதைச் செய்யறேன்!''

இருண்டிருந்த அவள் முகத்தில் சற்றே ஒளி படர, அப்போது தான் நினைவுவந்தாற் போலக் கேட்கிறாள்.

''ஆமாம்... அக்கா!... ஏதோ அவசரமாய்ப் பேசணும்னு போன் பண்ணினியே... என்ன?''

''ம்... அது... அது வந்து ஒண்ணுமில்லே... ஆனந்தி! சித்ரா கல்யாண விஷயமாய்ப் பேசலாம்னு...''

தொடர்ந்து பேச்சு.... வேறு பாதையில் திசை விட்டுக் கொண்டு போக, இருவரும் பிரிகிறோம்.

அலுவலக மேசையில் எனக்காகக் காத்திருக்கும் ஒரு கடிதக் குவியல்களில் ஆழ்ந்து, வேலையில் மூழ்கிப் போகிறேன். இடையே... தனிப்பட்ட முறையில் வந்திருக்கும் ஒரு கடிதம், கோபத்தோடு தலை காட்டுகிறது. சந்துரு!... பாங்கில் 'ஓவர்டைம்' செய்து, அந்த ஊதியத்தில் இன்ஜினியரிங் கல்லூரியில் சேர்த்து விட்ட என் ஆசைத்தம்பி! ஐந்து வயதில் பெற்றோரை இழந்து, எஸ். எஸ். எல். ஸியை எட்டுகையில் அண்ணனும் முடமாகிப் போக.... நானே ஒரே ஆதரவாய் என்னோடு ஒட்டிக் கொண்டவன்!'ஓவர்டைம்' பார்த்துவிட்டுக் களைத்துப்போய் நான் வீடு திரும்பும் தருணங்களிலெல்லாம், பரிவோடு என் முகம் பார்த்துப் பாசத்




கணவன்: டாக்டர்! என் மனைவியை நீங்க ஒரு தரம் பரிட்சை செய்து மருந்து கொடுக்கணும். இவ்வளவு வயசாகியும் இன்னமும் சின்ன பாப்பா வாட்டம் நடந்துக்கறா! நான் பேப்பர் கப்பல் செய்து தண்ணியிலே விட்டு விளையாடிக் கொண்டிருந்தா இவ வந்து கப்பலைத் தண்ணிக்குள்ளே அமுக்கி விடறா!

தோடு என் கைகளை வருடிக்கொடுத்து... ''நான் சம்பாதிக்க ஆரம்பிச்சப்புறம் நீ வேலை பார்க்கிறதையே விட்டுடணும் அக்கா!'' என்று ஆத்மார்த்தமான அன்புடன் சொன்னவன்! அதே சந்துரு..... இன்றைக்கு, வலுவில் வந்த அரசாங்க வேலையை உதறிவிட்டு, 'நண்பர்களுடன் கூட்டாய்த் தொடங்கிய ஃபாக்டரி முயற்சியிலும் தோற்றுப் போய் சொந்தமாய் பிஸினஸ் தொடங்க என்னிடம் பணம்கேட்டு நான் மறுத்துவிட்ட நிலையில், என்னை 'டிஸ் ஓன்' செய்து விட்டதாய்க் கா...ான கடிதம் எழுதியிருக்கிறான். மனம் நொந்தவளாய்க் கடிதத்தைக் கிழித்துக் குப்பைக் கூடையில் போடுகிறேன்.

பிறவியும்.... அந்தப் பிறவி தொடர்பாக வாய்க்கும் உறவுகளுமே... ஏதோ ஒரு வாய்ப்பால் அமைபவை என்கையில்... இடையில் வரும் புதியதான ஒரு உறவை ஏற்பதில் எனக்கு ஏன் இத்தனைத் தயக்கம்? சித்ராவின் திருமணத்தை முடித்து வைப்பதோடு, என் குடும்பத்தைப் பொறுத்தவரை என் கடமை முற்றுப் பெறுகிறது. அதற்கும் கூடுதலாக அவர்கள் பிரச்னைகளில் என்னை 'இன்வால்வ்' செய்து கொள்வது, அவர்களை மேலும் பொறுப்பற்றவர்களாக உருவாக்கவே உதவும். மாறாகப் புதிய பாதையில் துணிச்சலாக நான் அடியெடுத்து வைப்பதால்.... என் வாழ்க்கையையும் — இவ்விருவரின் வாழ்க்கையையும் கூடப் பொருளுள்ளதாக, பயனுள்ளதாக ஆக்கிக்கொள்ள வழி பிறக்கலாம். முயற்சியில் ஒருவேளை தோற்றுப் போனாலும்... இருக்கவே இருக்கிறது பழைய வாழ்க்கை!

மாலையில் அலுவலகம் முடிந்ததும் முகுந்தைச் சந்தித்து முடிவைச் சொல்லும் போது அவர் முகத்தில் ஒளிவிடப்போகும் மின்னல் கீற்றுக்களை இப்பொழுதே மனக்குள் தரிசிக்க முடிந்தவளாய்.... எதிர் காலத்தைப் புதிய கோணத்தில் எதிர் கொள்ளத் தயாராகிறேன்

## கேஷ் போஸ்ட்



**வி. ஆர். பட்டம்மாள், நெய்வேலி-1**

''கீர்த்திமிகு பைபிள்
　　கிருத்துவர்களையும்
இனிய கீதை
　　இந்துக்களையும்
முதிர்ந்த குர்ஆன்
　　முஸ்லிம்களையும்
உருவாக்கியது போதும்
　　இனியேனும் இவை
மனிதர்களை உருவாக்கட்டும்;

—அப்துல் ரகுமான்



**டி. டேவிட் அப்போலோ, திருப்பத்தூர்**
(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)

இறைவா உன்பால் இதுவே என் வேண்டுகோள்.
இதயத்திலிருந்து என் சஞ்சலங்களைக் களைந்தெறி;
இன்பமோ, துன்பமோ எதனையும் எளிதில் ஏற்றிடும்
வண்ணமாம் ஆற்றலைத் தருவாய்;
சேவையில் அன்பு பழுத்திட வலியருள்;
ஏழையர் தம்மை இகழ்ந்தொதுக்காமலும் செருக்குடைச்
செல்வரைச் சென்று பணியாமலும் இருந்திட வல்லதோர்
வரந்தர வேண்டும்;
வாழ்விலே நேரும் தாழ்வுறு நிகழ்ச்சியில் ஆழாத உயர் மனம்
அருளுதல் வேண்டும்.
உன் விருப்பத்திற்கிணங்க என் ஆற்றலை
அன்புடன் அர்ப்பணிக்கும் வலிமை தந்திடுவாயே தயாபரமூர்த்தி.

—ரவீந்திரநாத் தாகூர்



**கே. எஸ். ராஜசேகரன், கோவை-3**

உலகம் உண்கின்ற உப்பெல்லாம்
　　உழைப்பவர் வியர்வை வழங்குவது!
உலகப் புதுமையின் ஆதாரம்
　　ஒரு துளி வியர்வையில் அடங்குவது!
வெற்றிக்கும் உழைப்புக்கும் திருமணமாம்!
　　வியர்வைக் குழந்தைகள் பிரசவமாம்!
நெற்றியின் வியர்வையை விரலில்வழி;
　　நீள்புவி இவர்க்கென உயில்எழுது!

—கவிஞர் இளந்தென்றல்

**எஸ். டி. பாலசுப்பிரமணியன், கமுதி-3**

உன்னைக் கண்டபிறகுதான்
கனவு காண நான்
கற்றுக் கொண்டேன்.
இப்பொழுது...
கனவுகளே உன்னை எனக்கு
கற்றுத் தருகின்றன.

—மு. மேத்தா



ச. கோமதி, திருநெல்வேலி-57

பேபியபடி
எல்லாமும் வாங்கிக் கொண்டு
அப்புறமாய்
அக்னி வலம் வந்து
மாங்கல்ய தாரணம் செய்ய
வந்து நிற்கும்
ஹே மஹா புருஷ!
உன்னைப் பார்க்க
வெட்கப் பட்டுத்தான் தலைகுனிந்தேன்;
நாணத்தால் அல்ல!

—மஹாபிரபு





செல்வி புவனு, புதுடெல்லி-5

''கண்ணுக் கினியகண்டு — மனத்தைக்
காட்டில் அலையவிட்டுப்
பண்ணிடும் பூசையாலே — தோழி
பயனென் றில்லையடி!
உள்ளத்தில் உள்ளானடி — அதுநீ
உணர வேண்டுமடி
உள்ளத்தில் காண்பாய் எனில் — கோயில்
உள்ளேயும் காண்பாயடி.

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

க. மணிவாசன், இராசபாளையம்

நீ முதல்முறை என்னைத் தலைசாய்த்துக்
கடைக்கண்ணால் பார்த்தபோது
என் உள்ளத்தில் முள் பாய்ந்தது!
அதை இன்னும் எடுக்கவில்லை
முன்னை முன்னால் தானே எடுக்க வேண்டும்?
எங்கே இன்னொரு முறை பார்!

—மீரா





ஒ. கே. மீராபாய், சென்னை-48
(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)

உனது சோக முகம் திருப்பி
உன் வேதனைகளை நீ விவரித்தபோது
உனது விழிகளும் புருவங்களும்
உன் துயரத்தைப் பறைசாற்றின.
ஆயினும்
இமை விளிம்பைத் தொட்ட
சூடான கண்ணீரை
நீ நிறுத்தி வைத்துக் கொண்டாய்.
இப்புவியில்
நம் இதயங்களைப் புரிந்து கொண்டோர்
நாமிருவர் மட்டுமே!

—மாசேதுங்

**கனாக்கவரிகள்**

# ஜங்ஷனிலே ஒரு மேம்பாலம்

வையவன்

11

வில்லம் வந்துவிடுவான் என்பதற்காகவே டிஸ்சார்ஜ் ஆகிவிட விரும்பினான் ஹரி. முதுகிலும் கையிலும் புண் ஆறவில்லை. 'அடிக்கடி வந்து கட்டுப் போட்டுக் கொண்டால் போதும். காயம் அவ்வளவு மோசமாக இல்லை' என்று நர்ஸ் சொல்லவேதான் டாக்டரிடம் அனுமதி வாங்கிக் கொண்டான்.

அதோடு புறாக்களைப் பற்றி அடிக்கடி கவனம் வந்தது. எத்தனைப் புறாக்கள் கூட்டுக்குத் திரும்பினவோ... அந்தக் கூண்டை அவன் ஒருநாள் விட்டு ஒருநாள் சுத்தம் செய்வான். ஓர் அடிபட்ட புறா கொஞ்சம் நொண்டி நொண்டி நடக்கும். சரியாக அதனால் பறக்க முடியாது. அதைக் கையில் தூக்கி வைத்துக் கொண்டு தட்டில் தீனியை இறைத்துத் தின்னக் கொடுப்பான். 'அது எப்படித் தீனி தின்கிறதோ...'

ஆஸ்பத்திரிக்கு ஹரி கொண்டு வந்திருந்த சாமான்களைப் பையில் போட்டு எடுத்துச் செல்லக் காபி கடைப் பையன் கிட்டா விடிகாலையில் வந்திருந்தான்.

''கிட்டா என்னடா மூஞ்சி உம்முனு கீது... மொதலாளி உன்னை குடுத்தாரா ''

கிட்டா முகம் மலரவில்லை. அதை மலர வைக்க என்ன செய்ய வேண்டுமென்று ஹரிக்குத் தெரியும்.

''நம்ம ஊரிலே இன்னிக்கு என்ன சினிமா?''

''ஒண்ணும் புதுசா இல்லே அண்ணாத்தே.''

''சரி. திருப்பத்தூருக்கு நீ இன்னிக்கு செகண்ட் ஷோ பார்க்கப் போறே... துட்டு நான் தர்றேன்.''

அவன் மலர்ந்தான்.

''எங்கே இப்ப நான் சொல்றதைத் திருப்பிச் சொல்லு. சொல்லுவியா?''

''ம்ம்...''

''ரிக்கி டிக்கி.''

கிட்டா சொன்னான்.

''இப்போ நான் சொல்றதை வேகமா ஒண்ணு விடாமே சொல்லணும். அப்பத்தான் செகண்ட் ஷோ போகத் துட்டு கெடைக்கும். என்ன?''

''ஊம்'' பையன் உற்சாகமானான்.

''ரிக்கி டிக்கி கிட்டி ரிக்கி ரிக்கி ரிக்கி ரிக்கி டிக்கி.''

பையன் சொல்ல வாயெடுத்தான்.

''இரு ஒரு கண்டிசன்... மூணு சான்ஸ் தான். கரெக்டா அப்படியே சொல்லணும். இல்லே நீ தோத்துடுவே. நூறு தோப்புக்கரணம் போடணும். ஜெயிச்சா. சினிமாவுக்குத் துட்டு.''

கிட்டாவுக்குத் தன்னம்பிக்கை குறைந்தது.

ரிக்கி டிக்கி டிக்கி டிக்கி என்றான்.

''போச்சு! ஒண்ணு... இன்னும் ரெண்டு சான்ஸ்.''

''இன்னொரு தடவை சொல்லுங்க அண்ணாத்தை. இப்ப இருந்து தான் கணக்கு.''

''ரிக்கி டிக்கி கிட்டி ரிக்கி ரிக்கி ரிக்கி ரிக்கி டிக்கி.''

பையன் ஒருமுறை கூடவே வாய்க்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டான்.

''ரிக்கி டிக்கி கிட்டி ரிக்கி ரிக்கி ரிக்கி...'' கொஞ்சம் மூச்சுவிட்டு ''டிக்கி டிக்கி'' என்று சொன்னவன் குழம்பிவிட்டான்.

''போச்சு ஒண்ணு!''

பையன் முயல்வதற்குள் வெளியே யாரோ கதவுத் தாழ்ப்பாளை லொட்லொட்டென்று தட்டும் ஒலி.

''வாங்க'' என்று ஹரி கட்டிலில் உட்கார்ந்தவாறே வரவேற்றான்.

உள்ளே எஞ்சினியர் பீட்டர் ஸ்போர்ட்ஸ் பனியனும் அரை நிஜாருமாக உள்ளே வந்தார்.

ஹரி எழுந்து நின்று கொண்டான். எஞ்சினியரே அவனைப் பார்க்க வருவார் என்று ஹரி எதிர்பார்க்கவில்லை.

மூக்குக் கண்ணாடியைத் தள்ளிக்கொண்டு ஹரியைப் பார்த்துப் பிரியமாகச் சிரித்தார்.

---

அவர்: ''முற்றிலும் புதுமுகங்களையே போட்டுப் படம் எடுத்தது தப்பாப் போச்சு!''

இவர்: ''ஏங்க?''

அவர்: ''சென்ஸாரில் ''எல்'' சர்டிபிகேட் கொடுத்துட்டாங்க படத்துக்கு!''

—க. ஸ்ரீநாத்.



''குட் மார்னிங் சார்.''

''மார்னிங்... எப்படி இருக்கே?''

எஞ்சினியருக்குக் கூர்மையான கண்கள். பெரிய நெற்றி. வழுக்கைத் தலை. ஐம்பதாகப் போகிறது. தொப்பை இடையாது. நரை இடையாது. சோர்வு, சுருக்கம், தளர்ச்சி ஒன்றும் சொல்ல முடியாது. இன்னும் டென்னிஸில் ரயில்வே கிளப்பில் அவர் தான் ஜெயித்துக் கொண்டிருந்தார். பார்வை குத்தி ஊடுருவும். குரல் நேர் மாறானது. கீச்சுக் குரல். கேட்டால் சிரிப்பு வரும்.



''நல்லா இருக்கேன் சார். கிட்டா நாற்காலியை ..த்துப் போடு.''

''இருக்கட்டும். நான் காலேலே வாக்கிங் வந்தேன். ஒன்னைப் பார்க்கணும்னு ரெண்டு நாளா நெனைக்கிறேன். முடியலே.....''

''தாங்க்யூ சார்... இன்னிக்கு டிஸ்சார்ஜ் ஆகறேன்.''

''எப்போ ''

''இதோ இன்னும் பாக் பண்ணலே... ராத்திரியே ஆயிட்டேன். காலேலே போகலாமேன்னு தங்கச் சொன்னுங்க.''

''ஓ... ஆஸ்பத்திரியை அப்படி வசப் படுத்தியிருக்கே ''

ஹரி வெட்கத்தோடு சிரித்தான்.

''அப்ப வாயேன். ஒரு வாக் போய்ட்டு வருவோம்.''

''சரி சார்... கிட்டா எல்லாத்தையும் அடுக்கிப் பையிலே போட்டு டேபிள் மேலே வச்சுட்டு நீ போ... நான் அப்புறமா வர்றேன்.''

''இல்லே அண்ணாத்தை... மொதலாளி பையை எடுத்துக்கினு ஒங்களோட வரணும்னு சொல்லிக்கிரூரு. அவுரு சைக்கிள் எடுத்தாரேன்னு சொன்னூரு.''

''பையன் யாரு '' பீட்டர் கேட்டார்.

''டீ கடைப் பையன்.'' என்று பணிவோடு சொல்லிவிட்டு ''அப்ப இங்கியே இரு. அண்ணன் வந்தா சொல்லு'' என்றான்.

''நீ வேணும்னு இரேன் ஹரி...''

''இருக்கட்டும் சார்... இன்னும் ஒரு மணி நேரமாவது ஆவும்.''

''குட்...''

இருவரும் வெளியே வந்தனர். ஹரிக்கு நாலு நாட்கள் அடைந்திருந்து விட்டு

வருவது மகிழ்ச்சியாக இருந்தது. அவர்கள் இருவரும் லைனைக் கிராஸ் செய்து கொண்டு பார்சல்பேட்டைக்குச் செல்லும் பாதையில் நடந்தனர்.

காற்று அந்த இளங்காலையில் அற்புதமாகத் தவழ்ந்தது. வானம் லேசாக மூடியிருந்தது. வழியில் மரமல்லி மரங்களில் பூக்கள் கும்மென்று மணந்து கொண்டே உதிர்ந்தன. தூங்குமூஞ்சி மரத்தின் மேல் ஒரு கிளிக் கூட்டம் இரைப்பாதிக் கொண்டிருந்தது.

''நீ · ரிப்போர்ட் குடுக்கல்லேன்னு சொன்னாங்க. சந்தோஷப்பட்டேன்.''

ஹரி காது கொடுத்துக் கேட்டவாறே நடந்து வந்தான்.

''ஜங்ஷன் வரவர மோசமாப் போச்சு, வன்முறை... கலவரம்...''

''எஸ் சார்.''

''ஜங்ஷன் மட்டுமா ஊர் முழுக்க... நாடு முழுக்க... ஒலகம் முழுக்க....''

எஞ்சினியர் பீட்டர் நறுக்கென்று ரொம்ப இயல்பாகச் சொல்வது போல் சொன்னார். அவர் மனசில் அதுகுறித்து ஆழ்ந்த வேதனை இருப்பது தெரிந்தது. போகிற போக்கில் வெளகிகம் பேசுவது போல் அவர் தொடர்ந்தார்.

''எல்லாருக்கும் இப்ப வன்முறை தான் புடிக்குது. பேப்பர்... சினிமா... ஜனக்கூட்டம். கட்சி...எல்லாருக்கும் வன்முறை மேலே ஒரு கவர்ச்சி... எல்லாருக்கும் ஒரு மோகம். கராத்தே வேணும்னு துடிக்கறாங்க. அடி உதை கொடுக்கிற வில்லன் தான் ஹீரோ. பாரு ப்ருஸ் லீ... எதிரியை நிர்மூலம் பண்றதிலே இல்லாடி. அதைத் தவிர அவன் என்ன?''

எஞ்சினியர் தன்னிடம் பேசாமல் தனக்குள்ளே பேசுவது போல் ஹரி நினைத்தான்.

''உதை... அடி... கொல்லு... அழி... கொளுத்து... வெட்டு...இதான் இன்னிக்குக் கவர்ச்சி. ஒனக்கு என்ன வயசாச்சு ஹரி?'' அவர் சட்டென்று கேட்டார்.

''இருபத்தி மூணு சார்!''

''பரவால்லே... சின்ன வயசிலே பெரிய புத்தி இருக்கு.''

அவன் அடக்கமாகப் புன்னகை செய்தான். அவர் வானத்தைப் பார்த்தார். யோசனைப் பார்வை.

''காசிக்கு அம்மா அப்பா இல்லையா?''

''இல்லே சார்... ஃபயர்மேன் கேசவன்.. கொப்பம் ஆக்ஸிடெண்ட்லே போயிட்டாரே. அவர் தான் வளர்த்தாரு...''

''ம்ம்... படிச்சிருக்கானு?''

எதற்குக் கேட்கிறார் என்று விளங்கவில்லை.

''அஞ்சாவது படிச்சிருக்கிறாரு.''

''ம்... தொழிலு...''

''அதான் சைக்கிள் ஷாப்... மோட்டார் சைக்கிள், மொபட். ரிப்பேர் வந்தாலும் பண்ணுவாரு.''

''கேசவனுக்கு ஒரு பொண்ணு இருக்குது இல்லே?''

''ஆமா சார்... ஒரு ஹோட்டல் வச்சிருக்கு.''

''காசி அதைக் கல்யாணம் பண்ணிக்கலாமே.''

எதற்கு இந்த வருகை... ஏன் இந்த விசாரணை... ஹரி காரணத்தைத் துழாவினான்.

''இல்லிங்க சார்... அதை அவரு தங்கச்சி மாதிரி நெனைக்கிறாரு.''

''ஓஹோ...''

இந்த வயதிலும் எஞ்சினியர் பீட்டர் விறுவிறுவென்று நடந்தார்.

''காசி எங்கே பொறந்தான்?''

ஹரிக்குத் தெரியும். இருந்தாலும் சொல்லவில்லை.

''தெரியலே சார்...''

''அவனுக்குத் தான் அநாதைன்னு ஒரு நெனைப்பு வாட்டும் போல இருக்கு. அதான் அவன் சண்டை புடிச்சிக்கிட்டு இருக்கான்...''



நீதிபதி சாட்சியைக் கேட்டார்: ''குண்டு கடப்பட்டதை நீ பார்த்தாயா?''

சாட்சி: ''இல்லை சத்தத்தைக் கேட்டேன்.''

நீதிபதி ''சாட்சியம் போதவில்லை'' என்றார்.

சாட்சி திரும்பி, நீதிபதிக்கு முதுகு தெரியுமாறு நின்று கொண்டு பலமாகச் சிரித்தான்.

நீதிபதி: ''நீ பலமாகச் சிரித்து கோர்ட்டை அவமதிக்கிறாய்!''

சாட்சி: ''நான் சிரித்ததைப் பார்த்தீர்களா?''

நீதிபதி: ''இல்லை, சிரிப்புச் சத்தத்தைக் கேட்டேன்.''

சாட்சி அமைதியாக, ''சாட்சியம்போதவில்லை'' என்றான்.

—என். ஆர். நாகராஜன்.

# கரகரப்பு கரைஞ்சு போகுது!

தொண்டையிலே கரகரப்பு என்றால் தொல்லை மிகக் கடுமைதான். யாரையுமே பாதிக்கும் இது நம்மைப் பிடிக்கும் வழிகளோ ஏராளம். புகை, தூசு, எண்ணெய் மிகுந்த கார உணவு, குறிப்பாக ஐஸ் க்ரீம் மற்றும் குளிர்ந்த பானங்கள். கரகரப்பின் முதல் அறிகுறி தோன்றும்போதே ஸ்ட்ரெப்ஸில்ஸ் சாப்பிடுங்கள். ம்ம்... இது சுவைமிக்கது. இது கரைந்து போகும்போதே வேலையைத் தொடங்குகிறது. தொண்டைக்கு இதமளிக்கிறது. வாயில் புத்துணர்ச்சி திகழச் செய்து சுத்தமாக வைக்கிறது.

சுவையுடன் சுகமளிக்குது

## ஸ்ட்ரெப்ஸில்ஸ்

தொண்டைக் கரகரப்புக்கு சுவையான சிகிச்சை

4 இன்சுவைகளிலே: ஆரஞ்சு, லெமன், ஹனி-லெமன் மற்றும் ரெகுலர்.




CASBS-112-203 TAH

பொங்கும் மகிழ்ச்சி என்றும் தங்கிட

# தமிழ் நாடு பரிசுச்சீட்டு

## பொங்கல் சிறப்புக் குலுக்கல்

ரூ. முதல் பரிசு

# 10 லட்சம்



குலுக்கல் இடம்: தஞ்சை.

**3** சிறப்பு **2**வது பரிசு ரூ.**1 லட்சம்** வீதம்
மற்றும் பல்லாயிரக்கணக்கான பரிசுகள்

டிக்கட் விலை
ரூ 2/-



குலுக்கல் நாள் :
20.1.84

ஆணையர்,
தமிழ்நாடு பரிசுச் சீட்டுத்திட்டம், அரசினர் தோட்டம், சென்னை-2.

அவனைப் புத்தி பூர்வமாகத் தன் அளவுக்கு உயர்த்தி சமமாக்குவது போல் கருதினான்.

"ஹரி... ஜனங்களுக்கு ஏன் இப்படி வன்முறை வெறி?"

"எல்லாருமே அநாதைகளா நெனைக்கலாம் சார்" அவர் பளிச்சென்று திரும்பிப் பார்த்தார்.

"கரெக்ட்... சரியாச் சொன்னே!"

அவர் நின்றார். அவனைப் பார்வையில் எடை போட்டார்.

"நீ அப்படி நெனைக்கறியா ஒன்னைப் பத்தி..."

"ஓரளவுக்கு."

"கரெக்ட்... ஓரளவுக்கு எல்லாருமே அநாதைகள்தான். யாருக்கும் பாதுகாப்பு இல்லே. எல்லாரும் வன்முறையை நம்பறோம்..."

"நம்பலே சார்..." ஹரி குறுக்கிட்டான்.

"நம்பாமையா இவ்வளவு நடக்குது?"

"வன்முறை முடிவுன்னு யாருமே நம்பத் தயாரா இல்லே. வேறே வழி தெரியலே." எஞ்சினியர் அதை நன்றாக உருப்போடுவது போல் சொல்லிப் பார்த்துக் கொண்டார்.

"வேறே வழி தெரியலே... ம்ம்... வேறே வழி தெரியலே" எஞ்சினியர் கசப்பாகச் சிரித்தார்.

"வன்முறை எப்போவாவது மனுசனுக்கு சலிக்கப் போகுமா?"

"நிச்சயம் சார். தன் இனம் அழிய அழிய அவனுக்குச் சலிப்பு வந்துரும்... வேதனை வந்துரும்..."

"ரொம்ப நாள் ஆவுமில்லே"

"சொல்ல முடியாது சார்."

அது என்னவோ எஞ்சினியருடைய சொந்தப் பிரச்னை என்பது போல் அவர் நீளமான பெருமூச்சு விட்டார்.

"ஹரி... ஒனக்கு எஸ்தர் தெரியுமில்லே"

"தெரியும் சார்... முந்தா நேத்து என்னைப் பாக்க ஆஸ்பத்திரிக்கு வந்துச்சு." ஒரு கணம் அவன் மனத்திரையிலே பரிவுடன் கூடிய அவள் விசாரிப்பு பளிச்சிட்டுமறைந்தது.

"ம்ம்... ரொம்ப சுதந்திரமா வளர்த்திருக்கோம். அக்கா பொண்ணு. பாலிடெக்னிக்கிலே டிப்ளமா முடிச்சிருக்கு. மாத்யூ மாமாகிட்டே நீ படிச்சியா?"

"இல்லே சார். அவரைப் பத்திக்கேள்விப் பட்டிருக்கேன்."

"ரைட்... காசி படிச்சிருக்கான். மாமாவுக்கு ஒரே பொண்ணு. ஏன் சொல்றேன்னு புரியுதா"

"தெரியலிங்களே."

"அவன் எஸ்தர்கிட்டே பழகுறப்பலே கேள்விப்பட்டேன். பழகட்டும். ஆனா ஜாக்கிரதையா இருக்கணும். கல்யாணமாக வேண்டிய பொண்ணு. படிச்ச வாத்தியார் பொண்ணு... ஜாக்கிரதை வேணும்... என்ன நான் சொல்றது?"

அவர் வருகைக்குக் காரணம் என்னவென்று ஹரிக்கும் புரிந்தது.

(தொடரும்)



## வல்லவனுக்கு வல்லவன்

தஞ்சையிலிருந்து சென்னை செல்லும் (தடம் எண். 557) திருவள்ளுவர் பஸ் இரவு 7.30-க்குப் புறப்பட்டது. அய்யம்பேட்டையிலிருந்து பாபநாசம் வருகிற வரை பாதை ரொம்பவும் குறுகல்.

எதிரில் வந்தார் ஒரு சோழன். சந்திப்பு நேர்ந்தது. யாராவது ஒருவர் சற்றுப் பின்னால் போனால்தான் மற்றவர் சமாளித்து முன்னேறலாம்.

திருவள்ளுவர் "இது ஸ்டேட் வண்டி. பின்னாலே போக முடியாது" என்றார். சோழனும் மறுத்தார். வாக்குவாதத்திலேயே நேரம் ஓடியது. 8.30-க்குக் குடந்தையில் இருக்க வேண்டிய திருவள்ளுவர் 9 மணிக்கும் பாபநாசம் தாண்டாமலே நின்றார்.

பலரும் தலையிட்டுச் சோழனைப் பின்வாங்க வைத்து, அந்த ஓட்டுனர் அரை மனத்துடன் பின்னால் நகர வழிபிறந்து. வண்டிகள் ஓடியபோது மணி 9.15.

சுந்தரப்பெருமாள் ரயில்வேகேட் வந்தது. சென்னை ஜனதா எக்ஸ்பிரஸ் வருகிறதற்காகச்சாத்தப்பட்டுவிட்டது. பலமாக ஹார்ன் அடித்தார் திருவள்ளுவர். பாச்சா பலிக்கவில்லை.

வண்டியிலிருந்த ஒரு பயணி சொன்னார்:

"பாபநாசத்தில் இரண்டடி பின்னால் எடுக்க மறுத்தார் இவர். எடுத்திருந்தால் நேரத்தோடு போயிருக்கலாம். ஸ்டேட் வண்டி என்று ஜம்பம் பேசினார். ரயில் சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஆச்சே! வல்லவனுக்கு வல்லவன் வையகத்தில் உண்டு என்று தெரியாமலா சொன்னார்கள்?"

—செ. ரகுபதி.

அருமை பெருமையுடன்
நீ வாழ உனக்கு
அண்டார்டிகாவில் ஒரு
அழகான பங்களா!
புத்தாண்டு வாழ்த்துகள்.
இந்திரா

மேனகா

இந்தக் குரலை எனது புத்தாண்டு
வாழ்த்து!

துப்பார்க்கு துப்பாக்கி
துப்பார்க்கு துப்பாக்கி
துப்பாய தூஉ துப்பாக்கி
துப்பாக்கி துப்பாக்கி
துப்பாக்கி துப்பாக்கி!
தீரேந்திரா

'ஐயோ!.. இந்த பாவி மனுஷன் வெறுக்கட
புத்தாண்டு வாழ்த்துன்னு ஒரு 'டேப்'
அனுப்பி இருக்கிறாரே.. யார் அங்கே
இதைத் தூக்கி விட்டெறி!

பம்பாய் போய் இருக்கிற
கருணாநிதிக்கு புத்தாண்டு வாழ்த்து
அனுப்பினேன், விலாசம் தெரியலேன்னு
திரும்பி வந்துடுச்சே!

நாயக்கர்

தொண்டராகிய குமரி அனந்தன்
உள்ளிட்ட அனைத்து [illegible] ஜனதா
தொண்டர்களுக்கு தலைமையின்
புத்தாண்டு வாழ்த்துக்கள்!
தலைவர்
இரா. செழியன்
[illegible] ஜனதா

செழியன்

# 1984 புத்தாண்டு வாழ்த்துகள்

1984 புத்தாண்டில்
1984 போராட்டங்கள்!

எழுந்து பல் துலக்க பல்பொடி திட்டம்!
மகிழ்ந்து சாப்பிட சத்துணவு!
சத்துணவு ஜீரணிக்க....
1984ல் தாம்பூல, பீடா
திட்டம்!

ஜெயவர்த்தனா

ராமேஸ்வரம் வரை வந்து
நின்றுவிடாமல் கடல்
மேல் பாதயாத்திரை
செய்து இலங்கை
வருவீராக!

எதிர்க்கட்சித்
தலைவர்களுக்கு,
தங்களுக்குப் புத்தாண்டு
வாழ்த்துகள்
தெரிவிப்பதைத் தவிர்க்க
முடியாத காரணங்களால்
அடுத்த ஆண்டுக்கு
ஒத்தி வைத்துள்ளேன்!
அன்புடன்
குழந்தை வேலு

1984ல்
எனது புத்தாண்டு
'வாத்துகள்!'
(DUCKS)
கபில்.

கபில்

● தமிழகத்தின் பல பகுதிகளுக்கும் தனியார் பஸ்கள் ''டிராவல்ஸ்'' என்கிற பெயரில் தினசரி சென்னையிலிருந்து புறப்படுகின்றன. சுற்றுலா அழைத்துப் போவது போன்ற போர்வையில் இவை பயணிகளை ஏற்றிச் செல்கின்றன.

எழும்பூரில் கையில் பையுடன் வந்து சேர்பவர்களை ''சார் மதுரையா? திருச்சியா? வீடியோ கோச் ரெடி. சூப்பர் டீலக்ஸ் இதோ புறப்பட்டு விட்டது'' என்ற அழைப்பு இனிமையாக ஒலித்துக் கவர்கிறது. ஆனால் சீக்கிரமே கசப்புணர்வுதான் மேலோங்குகிறது.

நான் ஏறிய ஒரு பஸ் சென்னை–விழுப்புரம் – திருச்சி – மேலூர் வழியாக மதுரை செல்கிறது. ஆனால் சிவகங்கை செல்ல வேண்டியவர்களுக்கும், நாகர்கோவில் செல்லும் பயணிக்கும் முழுக்கட்டணம் வசூல் செய்து கொண்டனர்.

8.30–க்குப் புறப்பட வேண்டிய பஸ் 9.20 ஆகியும் புறப்படுவதாகத் தெரியவில்லை. காரணம் பஸ் நிரம்பவில்லை. பயணிகள் பலரும் கோபத்துடன் பேசவே, வேண்டா வெறுப்புடன் பஸ் புறப்பட்டது.

டிக்கெட் இல்லாமல் தங்களின் பயணப்படியைப் பெற முடியாது என்று பல




பயணிகள் எடுத்துக் கூறியும் பிடிவாதமாக டிக்கெட்டைத் திரும்பப் பெற்றனர். இறுதி வரை பஞ்ச் செய்யாமல் டிக்கெட்டை வாங்கி வைத்துக் கொண்டனர். சிவகங்கை, நாகர்கோவில் பயணிகளை பஸ் மாறிப் போகுமாறு வழியில் சில ஊர்களில் அம்போ என்று இறக்கி விட்டு விட்டனர்.

அவசரமாகவும், குறிப்பிட்ட நேரத்திற்கும் சென்றடைய வேண்டிய பயணிகளுக்கு இப்படிப்பட்ட இன்னல்களைத் தனியார் பஸ் நிறுவனத்தினர் தருவது முறையாகுமா?

சென்னை–23. க. முத்துக்கிருஷ்ணன்.

● கிரிக்கெட் சிறப்பிதழில் வெளியான வண்ணப் படங்களை 'கட்' பண்ணி என் ஆல்பத்தில் ஒட்டி வைத்துக் கொண்டேன். புள்ளி விவரங்கள் இதுவரை கேள்விப்படாதனவாக இருந்தன.

சென்னை–7. கே. எஸ். கலைமணி.

● ''இது கிரிக்கெட் அல்ல'' தலையங்கம் நம் கிரிக்கெட் வீரர்களுக்குக் கொடுத்த சரியான சவுக்கடி.

சென்னை–28. தி. க. ஸ்ரீராம்.

● இதுவரையில் சிரிக்கவும் சிந்திக்கவும் வைத்துக் கொண்டிருந்த முகுந்தன், இப்போது திகைக்கவும் வைத்துவிட்டாரே!

சென்னை–92. கே. ராஜகோபாலன்

● கோமதி சுவாமிநாதனின் தேவனின் கருணை சிறுகதை 25-12-83 இதழை கிறிஸ்துமஸ் சிறப்பிதழாக அலங்கரித்தது.

கிருஷ்ணகிரி–2. ஜெ. பீட்டர்.

● டாக்டர் சத்தியநாராயணா அவர்கள் மூதறிஞர் ராஜாஜி உதிர்த்த நகைச்சுவை நல்முத்துக்களை நினைவு கூர்ந்து வழங்கியது சுவையாக இருந்தது.

ஈரோடு–10. மேலூர் தாசன்.

● இந்திய அணியின் இன்றைய நம்பிக்கை நட்சத்திரங்களின் வண்ணப்படங்களோடு பாரபட்சமில்லாமல் மேற்கு இந்திய அணியின் முன்னணி வீரர்களின் வண்ணப்படங்களையும் சேர்த்து வெளியிட்டது பாராட்டுக்குரியது.

குடியாத்தம்–2. ஆர். அரிகோபி.

● புகைப்படச் சிறப்பிதழில் இந்து பிலிம் உயர் அதிகாரியைப் பேட்டி கண்டதுடன்



11.12.83 இதழில் வட்டமேஜை பகுதியில் ஒரு பிழைத்திருத்தமும் போட்டிருக்கிறீர்கள். ஆனால் இந்து பிலிம் தயாரிப்பில் உள்ள படியே பல கோளாறுகள் இருப்பது என் போன்ற ஸ்டுடியோக்காரர்களுக்குத் தெரியும். திருமணம் போன்ற நிகழ்ச்சிகளுக்குப் படம் எடுத்து விட்டு பிலிம் சரியில்லாததால் வாங்கிய முன்பணத்தைத் திருப்பிக் கொடுத்துக் கெட்ட பெயர் வாங்கிக் கொள்கிறோம். இதோடு சில நெகடிவ்களைத் தங்கள் பார்வைக்கு அனுப்பியுள்ளேன். புரோமைடு பேப்பரும் அப்படியே ஒரு பாக்கெட் சரியாக இருந்தால் அடுத்த பாக்கெட் Fog ரிசல்ட் வரும். இதனால் எங்களுக்கு ஏற்படும் கஷ்டநஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல.

மோகனூர். பி. கிருஷ்ணமூர்த்தி.
ஜெயா ஸ்டுடியோ

● கவாஸ்கர் எழுதிய சமீபத்திய புத்தகத்திலிருந்து மிக ரசமான தகவல்களைத் தொகுத்து வெளியிட்டதற்கு நன்றி. ஒவ்வொருவரின் குணசித்திரமும் ஒவ்வொரு துணுக்கிலும் பளிச்சிடுகிறது.

சிதம்பரம் ராஜி

அவர்கள் உள்ளே நுழைந்தார்கள்.

பேராசிரியரிடம் போய்க் காதோடு ஏதோ கிசுகிசுக்க,

அவர் கண்களை அசைத்து விஜியை அழைத்தார்.

போனாள்.

''ஸாரி விஜி. உங்கப்பாவுக்கு ஏதோ ஆக்ஸிடெண்ட் நடந்திருக்காம். நீ உடனே கிளம்பு.''

திகில் வயிற்றில் பரவி, ஒரு பயங்கர ஒலியை உற்பத்தி செய்ய, அது தொண்டையில் மரித்து, ஸ்தம்பித்துப் போனாள் விஜி.

''ப்ளீஸ், கிளம்புங்க!''

மாடியில் நடக்கும் போது படபடத்தாள்.

''இப்ப எங்கே எங்க டாடி? அவருக்கு என்னாச்சு? எப்படி ஆச்சு?''

''பயப்பட ஒண்ணுமில்லே விஜி. தைரியமாக இருங்க!''

டாக்ஸி தயாராக நிற்க, டிரைவர் ஆசனத்தில் ஒருவனும், பின்னால் ஒருவனுமாக நுழைந்து கொள்ள, சாலையை அசுர வேகத்தில் விழுங்கி ஜீரணித்துக் கொண்டிருந்தது டாக்ஸி.

சுமார் அரை மணி நேரம் பயணம்.

புறநகர்ப் பகுதி ஒன்றில் நுழைந்து, புதிதான பிளாட் ஒன்றின் முன்னால் நின்றது.

# தூரத்தில் தூறல்கள்



விஜிக்குப் புரியவில்லை.

''நாம வீட்டுவை விட்டு வந்திட்டமா? ஆக்ஸிடண்ட் இங்கேயா நடந்தது?''

அவர்கள் பதில் பேசாமல் நடக்க, மௌனமாக அவர்களைத் தொடர்ந்தாள்.

கோடியில் தெரிந்த ஓர் அறையைத் திறந்து விட அவசரமாக அதற்குள் விஜி பாய்ந்தாள்.

வெளியே தாள் கடக்கென்றது.

உள்ளே....

யாருமே இருக்கவில்லை.

கதவு ஓசைப்பட, வெளியே பாயத் தயாரானாள் விஜி.

உள்ளே நுழைந்த அவன், கதவை, உள் பக்கமாகத் தாள் போட்டுவிட்டு, அவளைப் பார்த்தான்.

''என் என்னை இங்கே கொண்டு வந்தே? எதுக்காக எங்கப்பாவுக்கு விபத்துன்னு பொய் சொன்னே?''

''நீதான் அவரோட செல்லப் பெண்ணாச்சே! அவருக்கு ஒண்ணுன்னு துடிச்சுப் போயிடுவியே!''

ஜப்பானியர்களின் நிர்வாக இயல் துறை வெற்றிக்குக் காரணங்கள்:

ஒவ்வொரு ஜப்பானியனும் வேலையில் சிரத்தையும் நிறுவனம் மீது அக்கறையும் காட்டுகிறான்; தன் திறமையை வளர்த்துக் கொள்ளப் பாடுபடுகிறான். மானேஜரும் தொழிலாளியும் சம உணர்வுடன் செயல்படுகிறார்கள்.

இதற்காகக் கடைப்பிடிக்கப்படும் வழிமுறைகள்:

1) காலையில் வேலை நேரத்திற்கு முன்னமேயே கம்பெனிக்கு வந்துவேலை தொடங்குவதற்கு முன்னால் அனைவரும் சேர்ந்து எளிய உடற்பயிற்சிகள் செய்வது.

2) காலையில் ஒவ்வொரு குழுவும் கூடி அன்றைய வேலைகள் பற்றியும் பொதுத் தகவல்கள் பற்றியும் பேசுவது.

3) உயர்வு தாழ்வு பாராமல் அனைவரும் ஒரே அறையில் உட்கார்ந்து வேலை செய்வது.

4) சேர்மனிலிருந்து கடைசி தொழிலாளி வரை ஒரே சீருடை அணிவது.

5) எல்லா ஊழியர்களும் ஒரே உணவு விடுதியில் சேர்ந்து உண்பது.

மாருதி உத்யோக் எம். டி., வி. கிருஷ்ண மூர்த்தி கூறியது.

தகவல்:. என். சுமதி.



''நான் உனக்கு என்ன துரோகம் செஞ்சேன்? இப்ப எங்கப்பா எங்கே? அவரையும் இதுமாதிரி அடைச்சு வச்சிருக்கியா?''

''ரிலாக்ஸ் பேபி! கொஞ்சம் மூச்சுவிட அவகாசம் எடுத்துக்கோ!''

''என்னை என்ன செய்யப் போறே?''

''ரேப் பண்ணப் போறேன்!''

'கக்' என்று ஓர் ஓசையை வெளிப்படுத்தி, பூமியிலிருந்து இரண்டங்குலம் மேலே போனாள் விஜி.

''நீ... நீ...''

நனைந்த கோழிக் குஞ்சாய், நிற்கும் அவளை ஒரு வித சுவாரசியத்துடன் பார்த்த அவன், ''உன்னை நீ தயார் செஞ்சுக்க... இன்னும் அரை மணி நேரத்துல திரும்பி வருவேன்!''... என்று கெடு வைத்துவிட்டு நகர்ந்தான்.

விஜிக்கு நாக்கு ஒட்டிக் கொண்டது..

அவன் சொன்ன கெடுவுக்கு இன்னும் பத்தே நிமிஷங்கள்...

அவள் மறுத்தாலும், அவள் புனிதம் சூறையாடப்படுவது நிச்சயம். அவளால் அந்த அறையை விட்டுக் கட்டாயம் வெளிப்பட முடியாது.

சட்டென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது.

'இதுக்கு ஏதோ பின்புறம் இருக்கணும். ஒரு பெண்ணை அடைத்து வைச்சு, அவகாசம் கொடுத்து ரேப் பண்றது கொஞ்சம் புதுசு. இதுல வெறி இல்லை. ஏதோ ஒரு வேகம் இருக்கு. அது என்னன்னு தெரிஞ்சுக்கணும். அவன்கிட்ட ஒரு கண்ணியம் இருக்கு. அதைத் தூண்டி முழுமையா வெளில கொண்டு வரப் பார்க்கணும். முடியுமா முயற்சி செஞ்சு பார்க்கலாம்.'

கதவு அதிர்ந்து திறக்க, தயாராக எழுந்தாள் விஜி.

''என்ன யோசிக்கறே? நீ திடமான ஒரு ஆண். இதுவோ ஒதுக்குப்புறமான பகுதி. கூச்சல் போட்டாலும், ஆர்ப்பாட்டம் பண்ணினாலும் நான் நஷ்டப் படப்போறது தான் உண்மை. நிச்சயம், உன்னை மீறி இயங்க என்னாலே முடியாது. அப்புறம் எதுக்குப் பாசாங்கு. நீ வந்த வேலையை முடிச்சிட்டுப் போ...!''

ஒவ்வொரு வார்த்தையும் அவனைப் பளார், பளாரென்று அறையத்தொடங்க, ஆடிப் போனான். அத்தனையும் நிஜம். அமிலம் தோய்ந்த வீரியமான வார்த்தைகள். தீர்க்கமான பார்வை... நிஜத்துக்குத் தக்கபடி தன்னை பாத்திக்கொள்ள முயற்சி பண்ணும் யதார்த்தம்.

''நீ... சொல்றதெல்லாம்...?''

''பொய்யில்லை... எனக்கு வேற வழியுமில்லை. உன் நோக்கம், என் இளமை. எடுத்துக்கோ, கமான்!''

அருகில் நெருங்கி, அவன் தோளில் கையை வைத்தாள்.

அதிசயமாகப் பார்த்தான்.

''சொல்லு! எதுக்காக என்னை இங்கே கொண்டு வந்தே!''

''கற்பழிக்க!''

''போய். உன்னையே நீ ஏமாத்திக்க சிருஷ்டிக்கப்பட்ட ஒரு போலிச் சமாதானம். உன் கண்ணுல காமம் இல்லே. உன் அசைவில ஒரு ஆவேசத்தைக் காணோம். உனக்கு அந்த எண்ணம் இல்லே. உங்கிட்ட ஒரு கோபம் இருக்கு. என்ன அது? என்னை உன்னோட ஸ்நேகிதியா நினைக்கச் சொல்லு!''

''உங்கப்பா யாரு ஸ்ஜி?''

''பெரிய பிஸினஸ் மாக்னெட். அரசியல் லெவல்ல நல்ல செல்வாக்கு உள்ளவர். ஊர்ல பெரிய மனிதர்கள்ள அவரும் ஒருத்தர்... நல்ல தர்மவான்.''

''இது நீ பார்த்த அவருடைய முகம்... நான் பார்த்த அவருடைய முகத்தைச் சொல்லவா?''

சொல்லத் தொடங்கினான்.

**அ**ந்த ஐந்து நட்சத்திர ஓட்டல் வாசலில் ஸ்கூட்டரை நிறுத்தினான், ராம். பிரமீளா இறங்கிக் கொண்டாள்.

''பயமா இருக்குடா தம்பி!''

''முதல் வேலை! அப்படித்தான் இருக்கும்கா. தைரியமா இரு. இது ரிசப்ஷனிஸ்ட் உத்தியோகம். தன்னம்பிக்கை இதுல ரொம்ப முக்கியம். நான் வரட்டுமா?''

தம்பியின் தலை மறையும் வரை நின்று பார்த்துவிட்டு, உள்ளே போனாள். உரிய அதிகாரிகளிடம் தன் வேலைக்கான உத்தரவைக் காண்பித்து விட்டு, அவர்கள் வாழ்த்த, வாசலில் இருந்த கௌண்டரை அடைந்து உடம்பை உள்ளுக்குள்ளே நுழைத்துக் கொண்டாள்.

**வா**சலில் பெரிய படகுக்கார் ஒன்று வந்து நிற்க, வேட்டி, சட்டை வெள்ளையோடு கறுப்பாக, தடித்த மனிதர் ஒருவர் இறங்க, ஹாலில் இருந்த அத்தனை பேரும் ஏராளமான வணக்கங்களை வாரி இறைத்தார்கள்.

அதில் அந்த மனிதரின் செல்வாக்கு இருந்தது.

''முதலாளி இருக்காரா?''

''நீங்க யாரு?''

''என்னைத் தெரியாத ஆள் கூட நம்ம ஊர்ல இருக்கா என்ன? நீ புதுசா?''

''ஸாரி. இன்னிக்குத் தான் சேர்ந்தேன்.''

''தப்பில்லே. தப்பில்லே. சுந்தரலிங்கம் வந்திருக்கார்னு சொல்லு. புரியும்!''

சொன்னாள். அதற்குள் முதலாளியே வெளியே வந்து விட்டார்.

உள்ளே போனார்கள்.

''சரக்கு புதுசா?''

''ம்!''

''ரொம்ப விறுவிறுப்பா காக்டெய்ல் அடிச்ச மாதிரி இருக்கும் போல இருக்கே. வருமா?''

''புதுசப்பா! அதுக்குள்ள எப்படி?''

''புதுசா இருக்கும் போதே சாப்பிட்டா ருசி கொஞ்சம் கூடுதலா இருக்கும். நாளைக்கு வர்றேன்.''

போகும் போது அவளைப் பார்த்துச் சிரித்து விட்டுப் போனார்.



மனைவி: என்னங்க! நம்ம வீட்டு ஜன்னலுக்குப் போட கர்ட்டன் ஒன்று வாங்கிக் கொண்டு வாங்க. எதிர் வீட்டிலிருக்கும் பையன்கள் அவங்க வீட்டு ஜன்னல் மூலமா நம்ம ஜன்னல் பக்கமே பார்த்துக் கொண்டிருக்காங்க!

கணவன்: நீ ஒரு தடவை வெளியே போய் உன் முகத்தை அவங்களுக்கு காட்டு. அவங்களே அவங்க ஜன்னலுக்கு கர்ட்டன் போட்டுக்குவாங்க!

**ம**றுநாள் காலை வந்தபோது தன்னைச் சுற்றி வலை பின்னப்பட்டிருப்பது பிரமீளாவுக்குத் தெரிய நியாயமில்லே.

வழக்கம் போல வேலையைத் தொடங்கினாள்.

அரை மணி நேரத்தில் சுந்தரலிங்கம் ஆஜராகி விட்டார். அவர் உள்ளே போன பத்து நிமிடத்தில் முதலாளி பிரமீளாவை அழைத்தார்.

''மிஸ்டர் சுந்தரலிங்கம் எட்டாவது ஃப்ளோர்ல இருக்கார். ரூம் நம்பர் 823. உன்னைப் பார்த்து ஏதோ பேசணுமாம். போறியா?''.

''எங்கிட்ட என்ன...?''

''என்னன்னு கேட்டுட்டுத்தான் வாயேன்!''

'சரி...' புரியாமல் புறப்பட்டாள். ஆனாலும் மார்பு படபடத்ததைக் கட்டுப்படுத்த முடியவில்லே.

பெருவிரலை மடக்கி, கதவில் ஓசையெழுப்ப,.

''உள்ளே வரலாம்'' என்றது குரல்.

போனாள்.

''உட்காரு பிரமீளா!''

''சொல்லுங்க சார்.''

''அதுக்குள்ள அவசரப் படறியே. ஒங்கிட்ட கொஞ்சம் பேசிக்கிட்டு இருக்கலாமேன்னுதான்!''

''எதுக்கு?''

''இந்த உத்தியோகத்துக்கு வந்திருக்கே! புரியாதபொண்ணா இருக்கியே!'' விகாரமாகச் சிரித்தபோது, ஓரத்துத் தங்கப்பல் இன்னும் கோரமாக இருந்தது. எழுந்தார்.

''நான் வர்றேன் சார்!''

''கதவு சாத்தியிருக்கு. உன்னால போக முடியாது. ஆட்டோமாடிக் லாக்கர்...!''

''சார் இது தப்பு. எனக்குப் பயமாயிருக்கு. நான் ஒரு ஏழைப்பொண்ணு.''

''சின்ன வீடு செட்டப் பண்ணித் தரேன். இதைவிட வசதியா நீ இருக்கலாம். சம்மதமா?''

அழத் தொடங்கினள். மன்றாடிப் பார்த்தாள். கெஞ்சியும் மிரட்டியும் பல வகைகளில் முயன்றும் முடியாமல் போயிற்று.

சுந்தரலிங்கம் வெறியோடு அவளை நெருங்கி ''மடில விழற பழத்தை விட, மரத்துல கல்லால அடிச்சுத் திங்கற திருட்டு மாங்காய்க்கு ருசியே தனி! வாடீ!'' என்றார்.

அந்த அறையைச் சுற்றி அவள் கண்கள் அலைய, திறந்திருந்த ஜன்னல் அவளை விரும்பியது. நகர்ந்து நகர்ந்து ஜன்னலை அடைந்தாள்.

சுந்தரலிங்கமும் அவளை நெருங்கிக்கொண்டிருக்க,

வெளியே பார்வையைச் செலுத்தினள்.

எறும்பு போல் கீழே ஊர்ந்து கொண்டிருந்த வாகனங்களும் மனித முடிச்சுக்களும், எட்டாவது மாடியின் உயரத்தில் வயிற்றைக் கலக்கியது.

ஒன்று மட்டும் புரிந்தது அவளுக்கு. இந்த இடத்தை விட்டு வெளியில் போக முடியாது! அப்படியே போனலும் சுந்தரலிங்கத்திடமிருந்து தப்பியோட முடியவே முடியாது! அவரது செல்வாக்கு அவளைச் சாய்த்து விடும்.

தம்பி ராம் நெஞ்சுக்குள் ஒரு முறை வந்து போக,

ஒரு அடி இடைவெளியில் சுந்தரலிங்கம் சமீபிக்க, துணிச்சலைத் திரட்டிக்கொண்டு, பளீரெனப் பாய்ந்து விட்டாள் கீழே.

சாலையில் போக்குவரத்து ஸ்தம்பிக்க, ரத்தக் குழம்பு சாலையில் கோலம் போட, போலீஸ் இடத்தை அடைக்க.

ஓட்டல் முதலாளியின் காதைச் சுந்தரலிங்கம் கடிக்க,

அவர், அந்த அறையில் இருந்தது மறைக்கப்பட்டு, புதுக்கதை ஒன்று உருவாகி,

பிரமீளாவின் வீழ்ச்சி, தற்கொலை என்றும் அதற்குச் சம்பந்தமில்லாத சில காரணங்களும் பத்திரிகைகளில் செய்தியாக அலற...

அது ஊரில் ஒரு வாரம் பரபரப்பாகப் பேசப்பட்டு, அடங்கிப் போனது.

''ஆனல் எனக்குள்ளே அன்னிக்கு மூண்ட தீ இன்னும் அணையலே விஜி! அந்த ஓட்டல்லே ஒரு ஸ்டூவர்ட் என்னேட நண்பன். உங்கப்பா அறைக்குள்ள, அக்கா போனது அவனுக்குத் தெரியும்.''

''அவர் போலீஸ்ல சொல்லலாமே!''

''என்ன லாபம்? உங்கப்போவோட சரூக அந்தஸ்து அவனைப் பழிவாங்கிடும். ஏழைப் பேச்சு எடுபடுமா விஜி? எத்தனை பெண்கள் இதுமாதிரி பாழ்பட்டாங்களோ? பணத்தால அத்தனையும் மறைக்கப்பட்டிருக்கு. கற்புக்காக எங்கக்கா தைரியமா உயிரைக் குடுத்திட்டா. கற்பை உங்கப்பா கிட்ட இழந்தவங்க எத்தனை பேரோ? அதனலதான் என் பழியைத் தீர்த்துக்க இந்த வழியைத் தேர்ந்தெடுத்தேன். உன் மேல உங்கப்பாவுக்கு உயிர்னு ஊருக்கே தெரியும். உனக்கு ஏதாவது நேர்ந்தால் அவர் நெஞ்சு புழுவாய்த் துடிக்கும்.''

''நினைச்சதைச் செய்யுங்க ராம்!''

''வேணும் விஜி. ஒரு ஸ்நேகிதின்னு நீ சொன்னப்புறம் நான் மாறிட்டேன். பழி உணர்ச்சியில் உங்கப்பா கூட நான் போட்டி போட விரும்பலே. வா உன்னைக்கொண்டு போய் உங்க வீட்டிலே விட்டுடறேன்.''

மௌனமாக அவனுடன் நடந்தாள்.

தெருக்கோடியில் டாக்ஸியை நிறுத்தி, இறங்கிக் கொண்டவள், ''யூ ஆர் எ ஜெம்!'' என்று கூறி அவன் கையை எடுத்து மெல்ல முத்தமிட்டாள்.

போர்டிகோவில் நின்ற கார், அப்பா வீட்டில் இருப்பதைச் சொல்லியது.

நடக்கத் தொடங்கினள்.

''நெஞ்சு புழுவாத் துடிக்கும்.''

சட்டெனக் காவணியைக் கிழித்துக் கொண்டாள். ரவிக்கையைப் பிளந்து உள் உடை தெரியும்படி செய்து விட்டு, தலையைக் கலைத்துக் கொண்டாள். நகங்களால் ரத்தக் கோடுகளை அங்கங்கே உற்பத்தி செய்து கொண்டு தன்னை ஒரு முறை நிதானமாகப் பார்த்துக் கொண்டவள், திருப்தி ஏற்பட்டவுடன்,

வீட்டை நோக்கி...

அலங்கோலமாக ஓடத் தொடங்கினள்!

---

● ஈரான் நாட்டில் அரசியல் கைதிகள் ஏராளமானவர்களுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டு கொல்லப்பட்டு வருகிறார்கள். அங்கு மரண தண்டனையை நிறைவேற்றும் முறை மிகவும்கொடூரமாக உள்ளதாக சர்வதேச மனித உரிமைச் சங்கம் கண்டனம் தெரிவித்து உள்ளது.

சில அரசியல் கைதிகள் உடலில் உள்ள ரத்தத்தை முழு அளவில் எடுத்து மரண தண்டனை நிறைவேற்றப்பட்டுள்ளது. இந்த ரத்தம். காயம் அடைந்த ஈரான் ராணுவ வீரர்களுக்கும் புரட்சி அரசின் காவல்காரர்களுக்கும் பயன்படுத்தப்படுகிறதாம்.

—ஜெ. ரமாமணி.



# செழியன் தலைமையில் ஜனதா செழிக்குமா?



"ஒரு கட்சியின் கொள்கைகளைப் பரப்பாமல் தனிநபர் துதி பாடி அவர் பிரபையைப் பரப்புகிற அரசியல் நம் நாட்டில் வளர்ந்து விட்டது. எதிர்க்கட்சிகளின் ஒற்றுமையின்மையால் 30, 40 சதவீதம் வாக்குகள் பெற்ற ஜனநாயக எதிர்ப்பு சக்தி ஆட்சியில் அமர்ந்து கொண்டு நாட்டைக் குட்டிச் சுவராக்குகின்றது" என்கிறார் தமிழ்நாடு ஜனதா கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 61 வயதான இரா. செழியன்.

சொல்ல விரும்பும் கருத்துக்களைத் தெள்ளத் தெளிவாக தமிழில் சொல்ல செழியன் விரும்பினாலும், கடந்த சில வருடங்களாக அவரது டெல்லி வாசம் காரணமாகக் கேட்க இனிமையாக இருக்கும் ஆங்கிலம் அவர் நாக்கில் அடிக்கடி நடனமாடுகிறது.

"மக்கள் தொடர்பில்லாமல் ஜனதா கட்சி இயங்கி வருவதை - முக்கியமாகத் தமிழ்நாட்டில் மாற்றுவது என் முதல் பணியாக இருக்கும்" என்கிறார் செழியன்.

தமிழ் நாட்டு அரசியல் எப்படி.....? என்று வினவினால் "இங்கு 'பேச்சும்' 'பூச்சும்' வெற்றி பெற்றுள்ளன" என்கிறார்.

"தமிழ்நாட்டில் கட்சியை வளர்க்க என்ன திட்டங்கள் வைத்திருக்கிறீர்கள்?"

"பாமர மக்களிடையே கட்சியின் கொள்கைகளை விளக்கிப் பிரச்சாரம் செய்ய வேண்டும். மக்களுடைய பிரச்னைகளை மத்திய மாநில அரசுகளின் கவனத்திற்குக் கொண்டு வர வேண்டும். அகில இந்திய அளவில் சொல்லப் போனால் 1977-ல் இருந்த நிலையை மீண்டும் கொண்டு வரவேண்டும். மாநிலங்களில் சிதறிக் கிடக்கும் ஒத்த கருத்துடைய கட்சிகளை இணைத்துக் கொள்வதற்கோ, அல்லது தேர்தல் உடன்பாடு செய்து கொள்வதற்கோ முயல வேண்டும்."

"தமிழ்நாடு ஜனதாவில் குமரிஅனந்தன் கோஷ்டியாகச் செயல்படுவார் என்று சொல்கிறார்களே...?"

"அவர் தலைவர் தேர்தலில் போட்டியிட்டுத் தோற்றதால் இவ்வாறு கூறுகிறார்களோ, என்னமோ? மற்றக் கட்சிகளைப் போலில்லாமல் தலைவர் பதவிக்கு தேர்தல் நடத்தி உட்கட்சி ஜனநாயகத்தை வெளிப்படுத்தியிருக்கிறது ஜனதாக் கட்சி. தமிழ் நாட்டில் கட்சி வளருவதற்குக் குமரிஅனந்தனின் சேவை மிகவும் தேவை. அதைத் தருவதற்கு அவர் தயங்க மாட்டார்."

பேச்சை அரசியலில் இருந்து மாற்றி, அவர் தலைமையில் 10 பேர் கொண்ட ராஜ்ய சபை உறுப்பினர்கள் குழு, தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் பற்றிக் கொடுத்த அறிக்கையைப் பற்றிக் கேட்கிறோம்.

"ரொம்பவும் மோசமான நிலையில் இருக்கின்றன பாங்குகள். 28 பாங்குகளில் பல ஆண்டுகளாகக் கணக்குகள் நேர்செய்யப்படாமல் இருக்கின்றன. சரியாகத் தயாரிக்கப்படாத கணக்குகள், நேர் செய்யப்படாத கணக்குகள் போன்றவற்றில் கிட்டத்தட்ட 50,000 கோடி ரூபாய் சிக்கி இருக்கிறது. இதனால் பாங்குகளில் பண மோசடிகள் நடந்து இருக்கின்றன. 2000 ஸ்டேட் பாங்க் கிளைகளின் 16 தலைமை அலுவலகங்கள் தான் தணிக்கை செய்யப்பட்டு இருக்கின்றன. 50 லட்சத்துக்கு மேற்பட்ட டெபாஸிட் தொகை இருக்கும் கிளை தணிக்கை செய்யப்பட வேண்டும். தனிப்பட்ட தணிக்கையாளர்களிடம் பாங்குகளைத் தணிக்கை செய்யும் பணியை ஒப்படைக்கக் கூடாது. மத்திய அரசின் தணிக்கை அதிகாரிகள் தணிக்கைக்கு பாங்குகளை உட்படுத்த வேண்டும்"

செழியன் கொடுத்த அறிக்கையின் அடிப்படையில் தற்போது அரசு நடவடிக்கை எடுக்க ஆரம்பித்திருக்கிறதாம்.

காலையில் எழுந்தவுடன் வீட்டிற்குள்ளேயே உடற்பயிற்சி. காபி, டீ, பால் எதுவும் குடிக்க மாட்டார். சுத்தமான சைவ சாப்பாடுதான். அண்ணா காலத்தில், கழக பத்திரிகைகளை நடத்தியபோது இரவு, பகல் என்று பாராமல் உழைத்ததனால் ஏற்பட்ட 'அல்ஸர்' கோளாறுக்கு ஆபரேஷன் நடந்த பிறகு சாப்பாடு விஷயத்தில் கவனமாக இருக்கிறார். போனவருடம் இறந்து போன மனைவியைப் பற்றிப் பேசும் போது நெகிழ்ந்து போகிறார்.

"சேமித்த பணம்' எல்லாம் அரசியலில் கரைந்து போனது குறித்து அவள் எதுவும் சொன்னது கிடையாது. அவள் இறக்கும் போது அருகில் நான் இல்லை. பெரியகுளம் தேர்தல் பிரச்சாரத்துக்குச் சென்றிருந்தேன்."

ஒரு காலத்தில் பெரிமேஸன் நாவல்களை விரும்பிப் படிப்பாராம். "இப்போது பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்படும் அறிக்கைகளைப் படிக்கவே நேரம் சரியாக இருக்கிறது."

விடைபெறும்போது "உங்களுக்குப் பிடிக்காத விஷயம்?" என்று கேட்டபோது செழியன் சொன்னது:

"நமது நாட்டில் உள்ள படித்த மக்களின் அக்கறையற்ற போக்குதான். இதனால்தான் குறைந்த அளவு ஓட்டுக்கள் பெற்ற ஜனநாயக எதிர்ப்பு சக்திகள் ஆட்சிக்கு வந்து விடுகின்றன. படித்த மக்கள் தங்கள் கடமையை உணர்ந்து தேர்தலில் ஓட்டுப் போட வேண்டும்."

—நமது நிருபர்

ஹார்லிக்ஸ் எங்களுடைய குடும்ப நண்பன். ஆபீஸிலிருந்து களைப்புடன் திரும்பிவரும் என் கணவருக்கு, காலேஜ் மற்றும் டான்ஸ் கிளாஸை முடித்துக் கோண்டு வரும் என் பெண்ணிற்கு, ஸ்கூல் முடிந்து திரும்பும் புட்பால் வீரனான என் பையனிற்கு—ஏன், தினமும் கடைகண்ணி போய் திரும்பும் எனக்கும்தான்—ஹார்லிக்ஸின் துணை ரொம்ப முக்கியம். எங்கள் குடும்பத்தின் நலனிற்காக நான் ஹார்லிக்ஸையே நம்பறேன்.

மால்ட்டட் பார்லி, முழு ஆடைப்பால் மற்றும் பொன்னிற கோதுமைகொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையைப்பெற்றது. எனவே, கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




புதிய காலத்திற்கேற்ப
புதிய தோற்றம்

HTD.HA(M).8072 TAM

## சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

# மாலையில் பூக்கும் மலர்கள்

## 23

உறக்கத்திலிருந்து எழுப்பப்பட்டு, தயாராகி, அவசரமாய் பாலாஜி க்ளினிக்கை அடைந்த போது அந்தப் பெண் மயக்கத்தில் இருந்தாள்.

வாயில் நுரை...

மிகவும் சன்னமாய் பல்ஸ்...

தாறுமாறான இதயத் துடிப்பு....

வேகமாகவும், சீரில்லாமலும் வெளிப்பட்ட மூச்சு...

நீலம் பாரித்துப் போன நகங்கள்....

முன்னணி நடிகை மோகனா!

சின்ன வயசு...

இன்றைக்கெல்லாம் இருபது, இருபத்தியொன்று வயசு பூர்த்தியாகியிருந்தால் அதிகம்.

பக்கத்தில் பதட்டத்துடன் ஒரு வயசான மாது.

அவள் அருகில் கோபம் பிரதானமாய்த் தெரிய, தாட்டியாய் ஒரு ஐம்பது வயதுக்காரர்.

''எங்க பாப்பாவ காப்பாத்துங்க டாக்டர். அவளைப் பாருங்க... கண்ணு சொருகிட்டதே... நா என்ன பண்ணுவேன்! முருகா....''

குரல் எடுத்து அழுதவனை லட்சியம் செய்யாமல் பாலாஜி பரபரவென்று காரியத்தில் இறங்கினார்.

டாக்டர் முகுந்தனிடம் மோகனாவைத் தியேட்டருக்கு எடுத்துச் செல்லக் கூறிவிட்டு பார்மஸியிலிருந்து சில மருந்துகளை உடனே கொண்டு வர நர்ஸிடம் சொல்லி, தானும் அகல அகலமாய்க் கால்களை வைத்து தியேட்டருக்குச் சென்றார்.

தூக்க மாத்திரைகளை ஓவர் டோஸாகச் சாப்பிட்டு விட்டாள் என்பதைத் தெரிந்துக் கொண்டு, அதற்குத் தேவையான மாற்று மருந்துகளையும், கார்டிஸோன், டெக்கோட்ரானையும் உடனடியாக ஊசி மூலம் உடம்பில் ஏற்றினார்.

ரயல்ஸ் குழாயை மூக்கு வழியாக உள்ளே செலுத்தி, சிரிஞ்ச் மூலம் வயிற்றிலிருக்கும் திரவத்தை உறிஞ்சினார்.

க்ளுகோஸ் பாட்டிலை ஸ்டாண்டில் தொங்க விட்டு, வலக்கை நரம்பில் மெல்ல ஏறச் செய்த நிமிஷத்தில், ஆக்ஸிஜன் குழாயை மூக்கில் பொருத்தினார்.

மானிட்டரை இணைத்து, இருதயத் துடிப்பைக் கண்காணித்தார்.

பக்கத்திலேயே நின்று பல்ஸ் ரேட் அதிகரிக்கிறதா என்று கவலையுடன் கணக்கிட, இருபது நிமிஷங்களில் லேசான முன்னேற்றம்.

நாடித் துடிப்பு நாற்பத்தி எட்டிலிருந்து மெள்ள மெள்ள ஏறியது.

நகக் கணுவில் நீலம் குறைந்தது.

இது நாழிகை மூச்சில் இருந்த சப்தம் சன்னமானது.

நாற்பது நிமிடங்களில் நிலைமை எதிர் பார்த்த வகையிலேயே சீரடைவது புரிந்ததும், மோகனாவை இன்டென்ஸிவ் கேர் அறைக்கு எடுத்துச் செல்லப் பணித்துவிட்டு, வெளியில் வந்தார்.

காத்திருந்தவர்களிடம் 'கவலைப்பட வேணும். ஷி ஈஸ் ஆல் ரைட்' என்று மட்டும் சொல்லி, மேற்கொண்டு அங்கு நின்று எதுவும் பேச விருப்பம் இல்லாமல் தன் அறைக்கு வந்தார்.

ஏ. ஸி. ஓடவிட்டு, நாற்காலியில் அமர்ந்தபோது ஜெனிக்கு இந்த மோகனாவின் நடிப்பு என்றால் ரொம்பவும் பிடிக்கும் என்பது ஞாபகத்துக்கு வந்தது.

–நடிகையாகறதுக்கு அழகு முக்கியமென்ற விதியை மோகனா உடைச்சிட்டாங்க பாவா... கறுப்பு, குள்ளம், முகமும் பிரமாதமா லட்சணம்னு சொல்ல முடியாது... ஆனாலும்! ஓ!... காட்!... என்னமா நடிக்கறாங்க! முகத்திலுள்ள ஒவ்வொரு நரம்பும், தசையும் சிரிக்குது, சிணுங்குது, கோபிக்

---

எழுத்தாளர்: ''முப்பது வருஷமா எழுத்தாளனா இருந்து என்ன பிரயோஜனம். எனக்குன்னு சொந்தமா வீடு, நகை, நட்டு, சொத்து சுகம் எதுவும் இல்லே!''

மனைவி: ''அது மட்டுமா? சொந்தமா கற்பனை கூட இல்லே!''

—ஆர். எஸ். சுப்பிரமணியம்.



குது... ரியலி... ஷி ஈஸ் எ ஸூப்பர் ஆக்ட்ரஸ்...

மனுஷத்தனம் இல்லாத புருஷனை வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டு, சமுதாயத்தின் ஏசல்களைத் தாங்கிக் கொண்டு, நிற்கும் தைரியமிக்க பெண்ணாகவும், முதுகெலும்பில்லாத தகப்பன், பெற்ற பெண்ணையே வியாபாரம் செய்ய முன்வந்ததும், 'நீயும் வேண்டாம், உன் பந்தமும் வேண்டாம்' என்று உற்றாரை உதறி வீட்டை விட்டு வெளியே வந்து தனியாக எதிர் நீச்சல் போடும் பெண்ணாகவும், சமுதாயத்தின் உயர்வுக்காக, சொந்த சுக, துக்கங்களைப் பாராட்டாமல் உழைக்கும் அறிவு ஜீவியாகவும், இன்னும் பலபல அற்புதமான வேஷங்களையும் தாங்கி நடித்த மோஹனா, நிஜ வாழ்க்கையில் தூக்க மாத்திரைகளைச் சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்குக் கோழையா?

நம்புவது கஷ்டமாக இருந்தது.

கௌரி இருந்தால் என்ன சொல்லுவாள் என்று நினைக்க முற்படுகையில், டாக்டர் முகுந்தன் கதவை ஒருதரம் தட்டிவிட்டு உள்ளே வந்தான்.

''டீ சாப்பிடறீங்களா டாக்டர்?''

அர்த்த ராத்திரியிலும் ஸ்டாப் ரூமில் டீ கிடைக்கும் என்பதால் பாலாஜி தலை அசைத்தார்.

ஐந்து நிமிஷங்களில் இரண்டு டீக் கோப்பைகளுடன் வந்து, அவருக்கு ஒன்றைத் தந்துவிட்டு இன்னொன்றுடன் எதிரில் அமர்ந்து கொண்டவன், டீ சாப்பிட்ட நாழிகையில் மோஹனாவைப் பற்றி நிறைய விவரங்கள் கூறினான்.

மோஹனாவின் தாய் ரொம்ப வருஷங்களுக்கு முன் இறந்து விட்டாளாம். கூடப் பிறந்தவர்கள் என்று யாரும் கிடையாதாம். அப்பாவும், இவளை வளர்த்த அத்தையும் தானும். இவள் சம்பாத்தியம் தரும் உற்சாகத்தில் அவர்கள் செய்யாத அட்டகாசம் கிடையாதாம்.

மோஹனா சுபாவத்தில் சாதுவாம். முன்னணி நடிகையாக இருந்தும் செட்டில் வாய் திறந்து உரக்கப் பேசி யாரும் கேட்ட



இல்லையாம்... தான் உண்டு. தன் வேலை உண்டு என்றிருப்பாளாம்...

''இந்த மோஹனா எனக்கு ஒரு புதிராகத் தான் இருக்காங்க டாக்டர்! எத்தனை பேர், புகழ், பணம்! எல்லாம் வேஸ்ட்... நாளைக்குத் தற்கொலை முயற்சி நியூஸ் வெளில பரவி, ஊரே அமர்க்களப்படப் போற அவமானம் வேற! 'எனக்கு இந்த தங்கக் கூண்டு வாழ்க்கை பிடிக்கலை: அதனால சாகறேன்: என் சாவுக்கு யாரும் காரணமில்லை'ன்னு எழுதி வைச்சிருந்தாங்களாம். அத்தை யம்மா ரகசியமாச் சொன்னாங்க... இவங் களுக்கு என்ன இல்ல? ஏன் தற்கொலை பண்ணிக்க முயற்சிக்கணும்? எனக்குப் புரியலை டாக்டர்...''

ஒருவித அலுப்பு கலந்த எரிச்சலுடன் முகுந்தன் பேச, பாலாஜி பதில் கூறாமல் மௌனம் பருகினார்.

பணம், புகழ், வசதி இருந்தால் ஆயிற்று? வாட் அபௌட் நிம்மதி? சந்தோஷம்?

லட்சக்கணக்கில் பணம் சம்பாதித்தாலும் வண்டி வண்டியாய்ப் புகழ் சேர்ந்தாலும் எங்கு போனாலும் கூட்டம் கூட்டமாய் விசிறிகள் சூழ்ந்துக் கொள்ள, ஒரு நிமிஷ இதமான தனிமை கிடைக்காமல் மோஹனா அவஸ்தைப்பட்டிருக்கலாம் இல்லையா? அப் படியே கிடைத்தாலும் அதை ஆத்மார்த்த மாகப் பகிர்ந்து கொள்ள ஒரு துணை, ஸ்னேகிதம் இல்லாமல் தனியாய்த் தவித் திருக்கலாம் அல்லவா?

மனம், அதன் தேவைகள், அதன் திருப்திகள் இதனை சுலபமாய் யாரும் புரிந்து கொள்ள மாட்டார்களா?

இல்லை என்றால் 'என்ன இல்லை மோஹனா வுக்கு? எதற்காக இந்தத் தற்கொலை முயற்சி?' என்று முகுந்தன் கேட்பானா?

எதுவும் பேசப் பிடிக்காமல் பாலாஜி அமர்ந்திருக்க, முகுந்தன் மேலும் இரண்டு நிமிஷங்கள் மோஹனா பற்றின தன் கணிப்பு களை வெளியிட்டுவிட்டு, எழுந்து விடை பெற்றுக் கொண்டு போனான்.

பாலாஜி மணிக்கட்டைப் பார்த்தார். கடிகாரம் நாலு என்றது.

மெள்ள எழுந்து, ஏ.ஸி.யை அணைத்து விட்டுக் கதவைத் திறந்து வெளியில் வந்தார்.

ரிஸப்ஷன் ஹாலில் சின்னதாகக் கூட்டம்.

படம்... தேதி... ஷெட்யூல்... கால்ஷீட் என்ற வார்த்தைகள் உதிரியாய்க் காதில் விழுந்த போது மோஹனாவைப்போட்டுப் பட மெடுக்கும் தயாரிப்பாளர்களில் சிலர் என் பதை ஊகிக்க முடிந்தது.

அதற்குள்ளா செய்தி வெளியே வந்து விட்டது?

யாரையும் சந்திக்க மனமில்லாமல் பத்தடி இடப்பக்கமாய் நடந்து தோட்டத்துக்குச் செல்லும் இன்னொரு வாசல் வழியாக வெளியில் வந்து கிளினிக்கைச் சுற்றிக் கொண்டு வீட்டை அடைந்தார்.

படி அருகில் படுத்து கிடந்த விக்ரம் வாலாட்டி சந்தோஷத்தோடு வரவேற்க, மாடிக்குச் சென்று உடையை மாற்றி, கைகளைக் கழுவிக் கொண்டு படுத்தார்.

உறங்க மாட்டேன் என்று மனசு சண்டி பண்ணியது.

ஏதாவது படிக்கலாம் என்ற எண்ணத் துடன் விளக்கைப் போட்டுவிட்டு, லைட் டேபிளில் இருந்த புத்தகத்தை எடுக்கக் குனிந்த போது, அடித்தட்டில் அடுக்கி யிருந்த நாளிதழ்கள் பார்வையில் விழுந்தன.

க்ராஸ்வேர்ட் போடவென எடுத்து வைக்கப்பட்டு, போடாமலேயே சேர்ந்து போன பேப்பர்கள்...

''வெளில நம்மைப் பத்திக்... கண்டபடி பேசறாங்க டாக்டர்...''

சரியாக நாலையோடு எட்டு நாட்கள்!

அழுகையை உள்ளே தள்ளி, தங்களைச் சூழ்ந்திருக்கும் நிலைமையை சாந்தி அவரிடம் வெளிப்படுத்தி. ஒரு வாரம் பூர்த்தி ஆகி விட்டது.

''வெளில நம்மைப் பத்திக்... கண்டபடி பேசறாங்க டாக்டர்...''

''அப்படின்னா?''–

''ப்ளீஸ் புரிஞ்சுக்கங்க ... ப்ளீஸ்..... ப்ளீஸ்...''

பாலாஜி புரிந்து கொள்ளவே செய்தார். சாந்தி கேட்டுக் கொண்ட நிலுவில் டாக்டர்–பேஷன்ட் உறவாக மட்டும் தங்கள் பிணைப்பு இருக்க முயற்சி பண்ணவே செய் தார்.

ஆனால் அதன் விளைவு?

க்ராஸ்வேர்ட் புதிர் தேக்கத்திலிருந்து எல்லாம்தானே?

காலையில், குட்மார்னிங் டாக்டர், குட் மார்னிங் சாந்தி... அடுத்த பேஷண்ட் யார்? மருந்து ஸ்டாக் இல்லை டாக்டர், ஆர்டர் பண்ணட்டுமா?– இந்த மாதிரி...

மாலையில் அப்பாய்ண்ட்மெண்ட்ஸ்முடிந்த பிறகு சரியாய் ஏழுமணிக்கு 'குட் நைட் டாக்டர்' என்று சொல்லிவிட்டு நின்று

---

சேஷசாயி காகித ஆலை காலனி மகளிர் மன்றத்தின் உறுப்பினர்கள் பலவிதமான காய்கறிகளைப் பயன் படுத்தி விதவிதமான பொம்மைகளைச் செய்து எல்லோரையும் வியக்கவைத்து விட்டனர். அதில் பூக்காரி பூ விற்பது போல் உள்ள காய்கறி பொம்மையும், படகு ஓட்டுவது போல் உள்ள காய் கறி பொம்மையும் எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தியது!

தகவல்: மேஜர்தாசன்.

படம்: ஆஸ்தானம் ராஜமாணிக்கம்



முகத்தைக் கூட ஏறிட விரும்பாமல் புறப்பட்டு அவள் போனதும், இவர் அங்கேயே அமர்ந்து ஜர்னல் ஏதாவது படிக்க முயலுவார். கவனம் பதியாது. வீட்டுக்கு வந்து பாட்டுக் கேட்கப் பார்ப்பார், விக்ரமோடு வாக் போவார், க்ராஸ்வேர்ட் புதிரோடு உட்கார்ந்து கொள்வார்.... ஆனால் எதிலும் புத்தி செல்லாமல் ஆரம்பித்த இரண்டாம் நிமிஷமே டேப் ரிக்கார்டரை அணைப்பார், ஒரு பர்லாங் நடக்கு முன் ''போதும்டா விக்ரம், வீட்டுக்குப் போகலாம்'' என்று திரும்பி விடுவார். இரண்டு வார்த்தைகளைப் பூர்த்தி செய்வதற்குள் அலுப்புத் தட்ட, பேப்பரை மடித்து வைப்பார்... அப்புறம் எரிச்சலும், சலிப்பும் நெஞ்சுள் திமுதிமுவென்று மண்டிப்போக, எங்கும் போகப் பிடிக்காமல், யாரோடும் எதுவும் பேசப் பிடிக்காமல் குட்டிப் போட்ட பூனை மாதிரி வீட்டைச் சுற்றிச் சுற்றி வருவார்.

ஒரு வாரமாய் இதுதானே நடக்கிறது?

ஓ காட்!

இந்தப் பைத்தியக்காரத்தனத்துக்கு ஒரு முடிவே இல்லையா?

—சமுதாயம் எப்படிப் புடவை, வேஷ்டியை மட்டும் நினைப்புல வைச்சிகிட்டு அதை உடுத்தியிருக்கும் நபர்களை, அவர்களின் உன்னதமான மனங்களை மறந்து விடுகிறது என்பதைப் பற்றியும், இரண்டு ஆண்கள் எத்தனை நெருக்கமாப் பழகினாலும் தப்பாப் பேசாத உலகம், ஒரு ஆணும், பெண்ணும் தங்க நடுவுல ஆரோக்கியமான நட்பை வளர்த்துக்க மட்டும் விடவே மாட்டேங்குறதுங்கறதைப் பத்தியும் நிறையவே பேசினாங்க பாலா.

அன்றைக்கொருநாள் எழுத்தாளர் துர்கா கூறின விவரங்களை தன்னிடம் எடுத்துச் சொல்லி 'இப்படி மஞ்சக் கண்ணாடி மாட்டிக்கிட்டுப் புடவை வேஷ்டியை பிரதானமா வைச்சு ஜனங்களை பார்க்கறதை, மதிப்பிடறதை, என்னிக்கு நாம விடப்போறோம் பாலா?' என்று வருத்தத்துடன் கௌரி வினவினது ஞாபகத்துக்கு வர, இந்தப் பேச்சை அடியோடு மறந்ததும் அல்லாமல் தானும் இந்த மஞ்சக் கண்ணாடி விமர்சனத்தால் பாதிக்கப்பட இடம் கொடுத்துவிட்டது மனசை அதிரச் செய்ய, பாலாஜி எழுந்து பால்கனிக்குச் சென்றார்.

சாந்திக்கும் எனக்கும் இடையில் தோன்றியுள்ளது உத்தமமான ஒரு நட்பு தவிர வேறு எதுவும் இல்லை... இதை ஏன் மற்றவர்கள் புரிந்து கொள்ள மறுக்கிறார்கள்?

கௌரியை இழந்த எனக்கு சாந்தியின் ஸ்னேகிதம் இதமான மருந்தாக இருக்கிறது என்பதை ஏன் உணர மாட்டேன் என்கிறார்கள்?

இரண்டு மனங்கள் நெருங்கி, பழகுவதற்கு வதற்கு கௌரி அன்று கூறியதைப்போல வேறு ஆரோக்கியமான காரணத்தையே நினைத்துப் பார்க்க மாட்டார்களா?

எப்போதும் வேஷ்டியும் புடவையும்தானா? ஒரு வாரமாய் சாந்தியின் விருப்பத்துக்குக் கட்டுப்பட்டு அவள் எண்ணங்களுக்கு மதிப்



சமீபத்தில் எர்ணாகுளம் சென்றிருந்தேன். நகரில் ஆட்டோவில் எந்தப் பகுதிக்கு சென்றாலும் ரூ. 2/- மட்டுமே வசூலித்தனர். வெளி மாநிலக்காரன் என்பதால் ஊரைச் சுற்றிப் பணம் கறக்கவில்லை. 'முந்தானை முடிச்ச' ஓடும் தியேட்டருக்குப்போகச் சொல்லி ஒரு ஆட்டோக்காரரிடம் கேட்டபோது 'ஞான் அவிடயிருந்து தன்னெ வருன்னு. ஆ பிலிம் ஹவுஸ் புல்லாயி' என்று மலையாளம் கலந்த தமிழில் சொல்லி சவாரியைத்தவிர்த்த போது நம்ம ஊர் ஆட்டோக்காரர்களை நினைக்காமலிருக்க முடியவில்லை.

—இரணியல் 'கயா'.

பளிக்கும் நினைப்பில் தனக்குத்தானே பூட்டிக்கொண்ட தளைகளை உடைத்துக் கொண்டு மனசு குமுற முற்பட, பாலாஜி ஆத்திரத்துடன் பிடரியைத் தடவி விட்டுக்கொண்டார்.

குறுக்கும் நெடுக்கும் நடந்தார்.

பின்னோடு வந்த விக்ரமின் முன் மண்டியிட்டு அங்கலாய்த்தார்.

''நான் சரியான மடையண்டா விக்ரம். வேலையத்த எந்த முட்டாளோ என்னமோ உளறினன்கிறதுக்காக எனக்கு நிம்மதி தர்ற சமாசாரத்தைச் செய்ய பயந்து ஒரு வாரமா வேஷம் போடறதை உங்கம்மா பார்த்தா 'நீங்களுமா பாலா?'னு உடைஞ்சு போயிடுவா. இல்லியாடா? சுயமா சிந்திக்கத் தெரியாத மண்ணாங்கட்டியா நான் ஆயிட்டேனா? எனக்கு என்ன ஆச்சு? ம்? இப்ப நான் என்ன பண்ணணும்?''

திரும்பத் திரும்ப மனசின் குழப்பங்களை கேள்விகளாக உரக்க சிந்தனை செய்தவர், அன்று மட்டும் இல்லாமல், அடுத்து வந்த இரண்டு நாட்களிலும் ஓயாமல் இனி தான் என்ன செய்ய வேண்டும் என்பதையோசனை பண்ணிய பிறகு நான்காம் நாள் தெளிந்து போனார்.

கௌரியின் படத்தின் முன் அமர்ந்து அவளோடு பேசுகிற பாவனையில் தன் பிரச்சினையில் ப்ரோஸ் அண்ட் கான்ஸை அலசியவர், ஒரு முடிவுக்கு வந்தவராய், அன்றைக்கு மாலை ஆறு மணியோடு கன்ஸல்டேஷன்களை முடித்துக் கொண்டு ''முக்கியமான வேலையா வெளில போறேன் சாந்தி'' முகுந்தன் கேட்டார்னு எட்டு மணிக்குள்ள வந்திருவேன்னு சொல்லு'' என்று கூறி விட்டுப் புறப்பட்டுப் போனார்.

(அடுத்த இதழில் முடியும்.)

# சீல






இரண்டு மூன்று வாரங்களாகத் தபால் வழங்கும் முறையில் சீர்திருத்தம் ஏற்பட்டிருப்பதாகச் சில பேட்டைகளிலிருந்து நேயர்கள் தெரிவித்திருக்கிறார்கள். மகிழ்ச்சியடைகிறேன். எங்கள் பேட்டையான அண்ணா நகரில் இப்போது ஒரு நாளைக்கு மூன்று முறை அஞ்சலார் வந்து ''அஞ்சல், அஞ்சேல்!'' என்கிறார்! வங்கிகளுக்கும் காலையிலேயே தபால் வருவதாகவும், அஞ்சல் வழி வரவு செலவுப் பணப் பரிமாற்றம் முன்னிருந்த தவக்கமின்றி நடைபெறுவதாகவும் அறிகிறேன். கண்பட்டு விடக் கூடாது. நிலைமை நீடிக்க வேண்டுமே!

• • •

தொலைபேசியின் தொல்லை வழக்கம் போலவே நாளொரு ''கேபின் பால்ட்டும்'', பொழுதொரு ''ராங் காலு''மாகவே வளர்ந்து வருகிறது! பாரதப் பிரதமரே தமது அதிருப்தியை வெளிப்படையாகத் தெரிவித்த பிறகுங்கூட... இந்தத் தொலைபேசியானது பழைய கறுப்பன் கறுப்பனே என்று போய்க் கொண்டிருந்தால், நீங்களும் நானும் போடுகிற சாதாரணச் சத்தம் அந்தக் கம்பிக்குள் புகுந்து அதனுடைய இரும்புக் காதுகளுக்குள் நுழையவா போகிறது!

''வேலை செய்யாத நாட்களுக்கும்சேர்த்து கூலி வசூலிக்கிறாயே!'' என்று அந்தத் தொலைபேசியிடம் நாம் சொல்ல முடியுமா? அதன் செவிதான் ''டெட்''டாக இருக்கிறதே! அதோடு ஒவ்வொரு ராங்காலுக்கும் நம்மிடந்தான் பணம் பிடுங்குகிறது இந்தத் தொலைபேசி! அதனுடைய ஒவ்வொரு தவறும் அதற்கு லாபம் சம்பாதித்துத் தருகிறது! எப்பேர்ப்பட்ட துறை பாருங்கள்!

இப்போதைக்கு வருமானத்தைச் சம்பாதிப்பதுதான் அதற்குத் தெரிகிறது! ஆனால் அந்த வருமானத்தோடு பொது மக்களுடைய ஒருமித்த வெறுப்பையும் வன்மையான கண்டனத்தையும் கூடவே சேர்த்துச் சம்பாதித்துக் கொள்கிறது என்பது அதற்கு இப்போது புரியவில்லை!

பொறி இயல் அதிகாரிகள் ''ஓவர் லோட்'' என்று ஒரு விளக்கம் கூறுகிறார்கள். அதாவது ஒரு வட்டாரத்தில் எத்தனை தொலைபேசி இணைப்புக்கள் இருக்கலாமோ அந்த அளவுக்கும் அதிகமாக இருப்பதாகச் சொல்கிறார்கள்! அது நம்முடைய குற்றமா? அதிக இணைப்புக்களுக்குத் தக்கவாறு அதிக நிலத்தடிக் கேபிள்களைப் போடுவதோடு அதிக இணைப்பு மையங்களை மேலும் வலுவுள்ள சாதனங்களோடு இணைக்கவேண்டும். இதெல்லாம் பொறி இயல் வல்லவர்கள் ஆய்ந்து செய்ய வேண்டிய இயந்திரப் பரிகாரங்கள். பரிகாரங்கள் செய்வதை விடுத்து, 'ஓவர்லோட்' என்று ஒரு காரணத்தை மட்டும் விளக்கினால் போதுமா? ஒரு லாரி 'ஓவர்லோட்' ஏற்றி ஒரு விபத்துக்கு உள்ளாகி விட்டால், விபத்து ஒரு குற்றம், 'ஓவர் லோட்' மற்றொரு குற்றம் என்று சொல்வதில்லையா?

இந்தச் சந்தர்ப்பத்தில் காதோடு காதாக நேயர்களுக்கு ஒன்று சொல்கிறேன். கடந்த ஓரிரு வாரமாகத் தொலைபேசி இணைப்புகளைப் பல இடங்களில் பள்ளம் தோண்டியிருப்பதோடு இயந்திர இணைப்புச் சோதனைகளும் ஏதேதோ செய்து வருவதைப் பார்க்கிறேன். சில பெரிய அதிகாரிகளே நேரடியாக நடவடிக்கைகள் எடுத்திருப்பதாகவும் கேள்வி. நிலைமை திருந்துகிறதா என்று கொஞ்சம் பொறுத்திருந்து பார்ப்போம்!

• • •

சென்னை நகரின் புறப்பகுதிகளிலும் பல வெளியூர்களிலும் புதிய புதிய குடியிருப்புகளைத் தோற்றுவித்திருக்கிறார்கள். இது நமது அரசுப் பணியிலே மிகவும் பாராட்ட வேண்டிய ஒரு விரிவாக்கப்பணி என்பதில் சந்தேகமில்லை. ஆனால் வசதிகளை வழிப்படுத்திக் கொண்டு, பிறகல்லவா குடியிருப்புகளை அங்கங்கே எழுப்ப வேண்டும்? அப்படிச் செய்யவில்லை! சரி; குடியிருப்புகள் தோன்றிய பிறகாவது தாமதமின்றி மின்சாரம், சுகாதார வசதிகள் போன்றவற்றைத்



# பல

**மீ.ப.சோமு**

துரிதப்படுத்தவேண்டும் அல்லவா? தூங்கிக் கொண்டிருந்தால் எப்படி?

வில்லிவாக்கத்தைச் சேர்ந்த ராஜாஜி நகரிலிருந்து ஆர். ஏ. வீராசாமி என்ற நேயர் மின்சாரக் குறை, சுகாதார வசதிக்குறை, போக்குவரத்து இடையூறுகள் முதலியன பற்றிப் புள்ளி விவரங்களோடு ஒரு விரிவான கடிதம் எழுதியிருக்கிறார். சாலைகளின் சீர்கேடான நிலையையும், இருட்டுக்குள் பொது மக்கள் படுகிற சங்கடங்களையும், போக்கிரிகள் தருகிற தொல்லைகளையும், இரவு நேரங்களில் பெண்டுகள் நடமாட முடியாத அளவுக்கு அந்தப் பகுதியின் மக்கள் நாள்தோறும் அனுபவிக்கிற இன்னல்களையும் அவர் எழுதியிருப்பது உள்ளத்தை நெகிழச் செய்கிறது! இந்தக் குறைகள் ராஜாஜி நகர், பாபா நகர், சீனிவாசநகர், என். எம். கே. காலனி, பழனியப்பா நகர், ஆகிய எல்லாப் பகுதிகளுக்கும் பொதுவான வேதனைகள் என்கிறார்! நூறு அடிக்குள் இரண்டு சாராயக் கடைகள் தோன்றிப் போடு போடென்று போடுவதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்! இந்த நிலைமைகளை எல்லாம் ஆராய்ந்து அவசர நடவடிக்கைகள் எடுத்தால், நூற்றுக்கணக்கான பொதுமக்களின் கண்ணீரைத் துடைத்த புண்ணியம் கிடைக்கும்!

● ● ●

'டாக்ஸி நிற்கும் இடம்' என்று பல இடங்களில் பலகை பொருத்தப்பட்டிருக்கிறது! ஆனால் டாக்ஸிகள் அங்கே நிற்ப தில்லை! வந்தால் அல்லவோ அவை நிற்பதற்கு?

திடீரென்று ரயில் நிலையத்துக்கோ, விமான நிலையத்துக்கோ அல்லது மருத்துவ மனைக்கோ, அவசரமாகப் போக வேண்டி நேர்ந்தால், பொது மக்களுக்கு வாடகைக் கார்கள் எளிதில் கிடைப்பதில்லை! கிடைத்தால் இரண்டு மடங்கு மூன்று மடங்கு வாடகை கேட்கிறார்கள்! போலீஸில் சொல்லி வழக்கைப் பின் தொடருவதா, அல்லது அவசரத் தேவைக்காகக் கேட்கிற வாடகையைக் கொடுத்து விடுவதா? பெரும்பாலும் அவசரத்தையும் தேவையையும் பொறுத்து நியாயமற்ற வாடகையைக் கொட்டுகிற நிலையே உண்டாகிறது! டாக்ஸிக்காரர்களைத் தனியே அழைத்துத் தன்மையோடு கேட்டால், ''அம்மாந்தூரம்'' போய்விட்டுப் பிறகு 'எம்ட்டி'யாகத் திரும்ப வேண்டுமே என்று சொல்கிறார்கள்! அதிலும் ஒரு நியாயம் ஓரளவுக்கு இருப்பது உண்மையே. இதையெல்லாம் பார்க்கும்போது, புதிய குடியிருப்புக்களில் சில சுறுசுறுப்பான சாலைச் சந்தி மையங்களில் டாக்ஸி நிலையங்களை அமைத்து, டில்லியிலும் வேறு சில நகரங்களிலும் இருப்பது போலத் தொலைபேசி வசதியும் செய்து கொடுத்தால் என்ன? புறப்படும்போதே மீட்டரைப் போட்டு விட்டு அந்த டாக்ஸி அந்தந்த வீட்டுக்கு வரலாம். அந்தந்த டாக்ஸி மையங்களில் போலீஸ் அதிகாரி இருந்து மீட்டர்களையும் டாக்ஸிகளின் போக்குவரத்தையும் கண்காணித்து இயக்கலாம். அதோடு டாக்ஸி ஓட்டுவோர் சங்கங்களும் தங்கள் உறுப்பினரிடையே கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றைச் சீராக நெறிப்படுத்தலாம். தங்கள் குறைகளையும் தேவைகளையும் எடுத்துச் சொல்லிக் கிளர்ச்சிகள் செய்வதற்கு மட்டுந்தான் இந்தச் சங்கங்கள் ஏற்பட்டுள்ளன என்று இல்லாமல், மக்களுடைய தேவைகளுக்கும் தினசரி வாழ்க்கைக்கும் தாங்கள் ஆற்ற வேண்டிய கடமைகளிலும்கூட இந்தச் சங்கங்கள் பங்கு கொண்டால், பொது மக்களிடையே இந்தச் சங்கங்களின் மீது நல்லெண்ணமும், அபிமானமும், ஆதரவு மனப்பான்மையும் உண்டாக இடமுண்டு! அப்படியில்லாமல், கிளர்ச்சிகளுக்கு மட்டுமே என்றிருந்தால், 'ஓட்டுநர் சங்கங்'களுக்கு எதிராக 'ஓட்டப்படுவோர் சங்கங்கள்' தோன்ற வேண்டியதுதான்! பால் கொடுப்போர் சங்கம் என்றால், அதற்கு எதிராகப் பால் குடிப்போர் சங்கம் என்று இப்படி ஒவ்வொரு துறையிலும் தோன்றினால் நாட்டின் அமைதி என்ன ஆவது?

வரிச்சலுகை

அதிக வருமானம்

ஆயுள் பாதுகாப்பு

விபத்து பாதுகாப்பு

# ULIP

## உங்கள் குடும்ப நலனைக் கருதி நான்கு நன்மைகள் பயக்கும் முதலீட்டுத் திட்டம்

யூனிட் லிங்க்ட் இன்சூரன்ஸ் ப்ளான் (ULIP) பற்றித் தெரிந்து கொள்ள இதுவே சமயம்!

நீங்கள் முதலீடு செய்யும் தொகைக்கு வரிச் சலுகை கிடைக்கிறது. இலக்குத் தொகைக்குச் சமமாக உங்களுக்கு ஆயுள் இன்சூரன்ஸ் பாதுகாப்பு கிடைக்கிறது. மருத்துவ சோதனை தேவையில்லை.

மேலும் ரூ. 15,000 பெறுமான விபத்து இன்சூரன்ஸ் பாதுகாப்பும் உண்டு.

எல்லாவற்றிற்கும் மேலாக, உங்கள் முதலீடு அதிக வருவாயைத் தருகிறது.

ULIP அளிக்கும் நன்மைகளை நீங்களே பாருங்கள்.

| சேமிப்புக் காலம் | ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய தொகை | இலக்குத் தொகை * | முடிவில் பெறும் தொகை |
|---|---|---|---|
| | ரூ. | ரூ. | ரூ. |
| 10 வருடங்கள் | 1200 | 12,000 | 19,000 |
| 15 வருடங்கள் | 800 | 12,000 | 24,500 |

உங்கள் வயது 18 லிருந்து 45 வரை இருந்தால் நீங்கள் ULIP திட்டத்தில் சேரலாம். உங்கள் இலக்குத் தொகை குறைந்தபட்சம் ரூ. 3000 ஆகவும் அதிகபட்சம் ரூ. 12,000 ஆகவும் இருக்க வேண்டும். சேமிப்புக் காலம் 10 வருடமோ அல்லது 15 வருடமோ இருக்கலாம். நீங்கள் இத்திட்டத்தில் சேர்ந்த மூன்று வருடத்திற்கு பிறகு ரூ. 12,000 பெறுமானமுள்ள மற்றும் ஒரு ULIP திட்டத்தில் சேரலாம்.

இதர விபரங்களுக்கு எங்கள் ஏஜெண்டுகள், தலைமைப் பிரதிநிதிகள் மற்றும் பாங்க் ஆஃப் பரோடாவின் கிளைகளை அணுகுங்கள்.



## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

(ஒரு பொதுத் துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம் : பம்பாய்.
பிராந்திய செயலகம் : ரெஜினுமான்ஷன்,
45 செகண்ட் லைன் பீச், சென்னை-600 001 போன் : 27433

தமிழ் நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:

• கோவை, பெரியார், நீலகிரி மாவட்டங்களுக்கு : திரு ஏ. தனபால், 30, ஹாஸ்பிடல் ரோடு, கோவை-641 018. போன் : 34776 (அலு) • மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு : திரு எம். இராமமூர்த்தி, 30, எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002 போன் : 30180 (அலு) • சேலம் மாவட்டத்திற்கு : திரு என் கே. இங்கர்சால், 155, கவர்ணம்பிளை தெரு, அன்னதானப்பட்டி, சேலம்-636 002 போன் : 64302 (வீடு) • தஞ்சை மாவட்டத்திற்கு : திரு கு. முத்துசாமி, 52-ஏ, வ.உ.சி. நகர், தஞ்சை-613 007 போன் : 1224 (வீடு) • நெல்லை, குமரி மாவட்டங்களுக்கு : திரு எம்.எம். காஜா, பாக்காவி பில்டிங் அனெக்ஸ், 41, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை, பாளையங்கோட்டை-627 002. போன் : 4520 (அலு), 5395 (வீடு)

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

Sista's UTI 152/83 TM

# சர்ச்சைக்குள்ளான சர்ச்சுகள் நிர்வாகம்



அக்டோபர் கடைசி வாரத்தில், இரண்டு நாளிதழ்களில் மட்டும் ஒரு செய்தி வெளியாகியது: ''கிறிஸ்துவ மடாலயங்களை நிர்வகிக்க, இந்துமத அறநிலையத் துறை, வக்ஃப் போர்டு மாதிரி அரசுத் தரப்பில் ஒரு வாரியம் நிறுவப்படும்.''

இதைப் பார்த்த ஸி. எஸ். ஐ., கத்தோலிக்கத் தலைவர்களும், பேராயர்களும், ஆர்ச் பிஷப் அருளப்பா அவர்கள் வீட்டில் ஓர் அவசரக் கூட்டம்கூட்டி விவாதித்தார்கள்.

இதற்கு ஒரு வாரத்துக்குப் பிறகு, 'கிறிஸ்துவ மடாலயங்களை நிர்வகிக்க வாரியம் அமைக்கப்பட மாட்டாது' என்று அரசுத் தரப்பில் முதல்வர் எம். ஜி. ஆர். முன்னாள் ஷெரீப் டாக்டர் பி. எம். ரெக்ஸ் அவர்களுக்கு உறுதி அளித்ததற்கு நன்றி தெரிவிக்கும் விளம்பரம் ஒன்று வெளியாயிற்று!

அரசு வாரியம் ஒன்றை அமைக்கும்பட்சத்தில், கிறிஸ்துவத்தலைவர்கள் ஏன் இப்படி பயந்து நடுங்க வேண்டும்? இந்து — முஸ்லிம் மத அமைப்புக்களில் நிர்வாக போர்டுகள் செயல்படவில்லையா? அதுதான் போகட்டும்; வாரியம் கிடையாது என்று முதல்வர் சொன்னதற்கு, பெரிய விளம்பரம் ஒன்று கொடுத்து அவருக்கு நன்றி தெரிவிக்கும் அளவுக்கு அப்படி என்ன ஆகிவிட்டது? வாரியம் அமைத்தால் எதையாவது கண்டு பிடித்து அம்பலமாக்கிவிடுவார்களோ என்ற அபாயத்தைத் தவிர்த்ததற்காக விசேஷ நன்றி தெரிவிக்கிற மாதிரி அல்லவா அந்த விளம்பரம் இருந்தது?.....

டாக்டர் பி. எம். ரெக்ஸ் அவர்களைச் சந்தித்து மேற்படி கேள்விகளைக் கேட்டோம்:

''நீங்கள் கேட்டவை நியாயமான கேள்விகளே. சாதாரணமாக எழக் கூடியவைதான்.

வெளியான செய்தியில், கிறிஸ்துவ மடாலயங்கள் மட்டுமின்றி, அவை நடத்தும்கல்வி நிறுவனங்கள், அவற்றின் சொத்துக்கள் யாவும் இந்த வாரியத்தின் கட்டுப்பாட்டுக்குள் அடங்கும் என்று குறிப்பிட்டிருந்தது.

கிறிஸ்துவ நிறுவனங்கள் இந்தியாவில் கல்வி நிலையங்களைப் பெருமளவில் நடத்தி வருவதை யாரும் மறுக்க மாட்டார்கள். இந்த நிறுவனங்கள் செய்யும் தொண்டு புதிதாகச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை. கல்வி நிறுவனங்களை நடத்த, சிறுபான்மை சமூகத்தைச் சேர்ந்தவர்கள் என்ற முறையில், இந்திய அரசியல் சாசனச் சட்டத்தின் படி கிறிஸ்துவர்களுக்கு உரிமை வழங்கப்பட்டிருக்கிறது. இந்த நிறுவனங்களைக் கட்டுப்படுத்த ஒரு வாரியம் செயல்படுமேயானால் எங்கள் மைனாரிடி உரிமைகளை இழப்பதோடு, கல்வி நிறுவனங்களில் பாடபோதனையும், கட்டுப்பாடும் உயர்வான நிலையில் தற்போது இருந்து வருவது சீர்குலைந்து போகும். இது எங்களால் ஏற்க முடியாத கொடுமை!

சர்ச்சுகளுக்கு வரும் பணம் அல்லது சொத்து இவற்றை யாரும் தணிக்கை செய்வதில்லை என்று யார் சொன்னது? அரசாங்க ஆடிட்டர்கள் முறையாக இவற்றின் வரவு செலவுகளையும் சொத்துக்களையும் ஆடிட் செய்கிறார்களே, தெரியாது? இதற்கு மேல் என்ன செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்?

கிறிஸ்துவ மடாலயங்களின் பணம் துஷ்பிரயோகம் செய்யப்படுகிறது என்ற எண்ணம் ஆதாரமற்றது. சர்ச்சுகளில் உண்டியல் ஏந்தி வசூல் செய்து பணம் திரட்டுகிறோம். திருமணங்களின் போதும், பிற நிகழ்ச்சிகளின் போதும் அளிக்கப்படும் நன்கொடைகளை வசூல் செய்கிறோம். எச். ஆர். இ. ஸி., வக்ஃப் போர்டு இவற்றுடன் ஒப்பிடும் போது எங்களுக்கு இருக்கிற சொத்துக்கள் மிகமிகக் குறைவு. மேற்படி இரண்டின் கட்டுப்பாட்டுக்குள்ளிருக்கும் சொத்துக்களைச் சீராக நிர்வகிக்க ஒருவேளை வாரியங்கள் தேவைப்படலாம். அதுபற்றி நான் கருத்துக் கூறவில்லை. ஆனால் கிறிஸ்துவ மடாலயங்களையும் கல்விக் கூடங்களையும் முழுக்க முழுக்க மத சேவைக்காகத் தம்மை அர்ப்பணித்துக் கொண்ட பாதிரியார்கள் நடத்துகிறார்கள்! அவர்களுக்கு மேலே ஒரு போர்டு இயங்கினால் அது எத்தகைய கேலிக்கூத்தாக இருக்கும் என்று யோசித்துப் பாருங்கள்.

எங்களுடைய நியாயமான ஆதங்கத்தை எளிதில் தீர்த்து வைத்த காரணத்தால்தான் முதல்வருக்கு நன்றியறிவிப்புத் தீர்மானம் நிறைவேற்றி, செய்தியை முதலில் வெளியிட்ட நாளிதழ்களில் விளம்பரம் செய்தோம்.

பேட்டி: சாருகேசி



பாலே நடனம்.

# பாரீஸில் பாரதியின் புதுமைப் பெண்

9

ஃப்ரெஞ்சு நாடகக் கலை வளர்ச்சியை மாணவப் பருவத்திலிருந்து கவனித்து வந்திருந்த நான் ஃப்ரெஞ்சு நாடகங்களையும் ஆப்பராக்களையும் பார்க்க வேண்டும் என்று மிகவும் ஆசைப்பட்டேன்.

துரதிர்ஷ்டவசமாக திரு. குல்ஜார் ஸிங் ஸந்துவுக்கு இந்த விஷயங்களில் எல்லாம் நாட்டமோ ஆர்வமோ இருக்கவில்லை.

''நான் ஆங்கில நாடகத்தையே பார்க்க மாட்டேன். பாஷையே தெரியாமல் ஃப்ரெஞ்ச் நாடகத்தை எப்படிப் பார்ப்பேன்?'' என்றார்.

''நல்ல நிகழ்ச்சி இருந்தால் நாங்கள் ஏற்பாடு பண்ணுகிறோம்'' என்று ஃப்ரெஞ்சு எக்ஸ்டர்னல் மினிஸ்ட்ரி சொல்லியிருந்ததே தவிர அதுவரை எதையும் ஏற்பாடு செய்திருக்கவில்லை. எனக்கு மிகவும் ஏமாற்றமாக இருந்தது. ரசனையில்லாத ஒருவரைக் கட்டாயப்படுத்தி அழைத்துப் போவதில் ஏதும் சுவாரஸ்யமிருக்கவில்லை.

ஒரு ஞாயிறன்று எனக்கு அறிமுகமாகியிருந்த இரண்டு தென்னிந்தியர்களைச் சந்திக்கத் தனியாகச் சென்றேன். திரு. சந்து தம் சிநேகிதர்களைச் சந்திக்கச் சென்றார்.

அன்றிரவு பன்னிரண்டு மணிக்குத் திரு. ஸந்து ஹோட்டலுக்குத் திரும்ப எந்த ரயிலைப் பிடிப்பது என்று Metro–வில் (சுரங்கப் பாதையில் செல்லும் மின்சார ரயில் நிலையம்) தெரியாமல் நிற்கையில், ஒரு ஃப்ரெஞ்சுப் பெண்மணி அவரை அழைத்துப் பேச்சுக் கொடுத்து, சரியான ரயிலில் உட்கார்த்தி அவருடன் பயணம் செய்திருக்கிறாள்.

''இந்தியாவுக்குப் போயிருக்கிறேன். உங்கள் அம்ருத்ஸர் கோயிலைப் பார்த்திருக்கிறேன். எனக்கு இந்தியர்களை ரொம்பப் பிடிக்கும்'' என்றிருக்கிறாள்.

திரு. ஸந்துவிற்கு ஏக சந்தோஷம். உற்சாகமாகப் பேச ஆரம்பித்திருக்கிறார். பேச்சுவாக்கில் 'பாரீஸ் நகர வீதிகளில்

சோர்போன் பல்கலைக் கழகம்



வாஸந்தி

இரவு நேரத்தில் சுற்றி வர ஆசை. என்னுடன் வந்திருக்கும் தென்னிந்தியப்பெண் இரவில் புத்தகத்தைப் படித்துக்கொண்டோ எழுதிக் கொண்டோ உட்கார்ந்து விடுகிறாள், என்னுடன் நடக்க யாருமில்லை' என்று குறைப்பட்டுக் கொண்டிருக்கிறார்.

''வருத்தப்படாதீர்கள். நான் வருகிறேன் உங்களோடு நடக்க'' என்றாளாம் அந்தப் பெண்மணி.

திரு. ஸந்துவிற்குத் தலைகால் புரியவில்லை! ''நாளைக்கே ஹோட்டலுக்கு வாருங்கள். சாப்பிட்டு விட்டு வெளியில் போகலாம்'' என்றிருக்கிறார். ''என்னுடன் பிரயாணம் செய்யும் பெண் ஒரு கலைப் பைத்தியம். நாடகங்களும், பாலேக்களும் பார்க்கத்தான் விருப்பம்'' என்றாராம்.

மறுநாளைக்குத் திரு. ஸந்து இந்தப் பெண்மணியைப் பற்றிச் சொன்னபோது எனக்குத் திகைப்பாக இருந்தது. முன்பின் தெரியாத ஒரு வெளிநாட்டானுடன் நடு இரவில் நடக்க ஒரு பெண்மணி தானாகச் சம்மதிப்பாளானால் அவள் எப்படிப்பட்டவளாக இருப்பாள் என்று யோசனையாக இருந்தது. அவள் யார், குடும்ப ஸ்திரீயா, வேலை பார்க்கிறாளா என்ற எந்த விவரமும் திரு. ஸந்துவிற்குத் தெரியவில்லை.

ஆனிடம் சொன்னபோது, ''ஒரு சராசரி ஃப்ரெஞ்சுப் பெண் இப்படி வரவே மாட்டாள்'' என்றார் அவர்.

அன்றிரவு சொன்னபடி அந்தப் பெண் ('ஒடைல்' என்று பெயர்.) வந்தார்.

நான் சுவாரஸ்யத்துடன் கவனித்தேன். லட்சணமாக, அலங்காரப் பூச்சு எதுவுமில்லாமல் நாற்பது வயது மதிக்கும்படியாக இருந்தார். என்னிடம் பிரியமாகக் கொச்சையான ஆங்கிலத்தில் பேசினார்.

''உங்களுக்கு நாடகங்களும், ஆப்பராக்களும் பிடிக்கும் என்றார் மிஸ்டர் ஸந்து. நான் இந்த வாரத்துப் ப்ரோக்ராம் புத்தகத்தைக் கொண்டு வந்திருக்கிறேன்'' என்று புத்தகத்தைக் காட்டினார்.

''ஒரு நல்ல பாலேயிருக்கிறது நாளன்றைக்கு. உங்களுக்கு இஷ்டமிருந்தால் போகலாம்'' என்றார்.

ஆப்பரா இல்லம்





ஒடைல்

மறுநாளைக்கும் அதற்கு மறுநாள் மாலை வரையும் எங்களுக்கு முக்கியமான ப்ரோக்ராம் இருந்தது. தியேட்டருக்குச் சென்று முன்கூட்டியே டிக்கெட் வாங்க அவகாசமிருக்கவில்லை. என்ன செய்யலாம் என்று நான் தயங்கினேன். முன் கூட்டியே டிக்கெட் வாங்கினால் ஒழியப் போக முடியாது. திரு. ஸந்து சடாரென்று 200 ஃப்ராங்குகளை (சுமார் ரூ. 300) எடுத்து ஒடைலிடம் கொடுத்து, ''மூன்று டிக்கெட் நீங்களே வாங்கி விடுங்கள். நாளன்றைக்கு மாலை தியேட்டர் வாசலில் சந்திக்கலாம்'' என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப்போட்டது.

இந்தப் பெண்மணி யாரென்றே தெரியாது. ஒரு மணி நேரப் பழக்கத்தில் இவர் இப்படி நம்புவது மடத்தனம் என்று தோன்றிற்று. வெளிநாட்டில் பணம் பறிபோனால் யார் உதவ வருவார்கள்? ஒடைலின் எதிரில் எதுவும் சொல்ல முடியாமல் வாயை மூடிக் கொண்டேன். உலாவப் போகலாம் என்று அவர்கள் கூப்பிட்ட போது, ''எனக்குக் களைப்பாக இருக்கிறது'' என்று சொல்லி என் அறைக்குச் சென்று விட்டேன்.

அன்று இரவு இரண்டரை மணி வரை ஒடைலும் சந்துவும் பாரிஸ் வீதிகளைச் சுற்றினார்களாம்!

இந்த விவரங்களைக் கேட்டு ஆன் ஆச்சரியப்பட்டுப் போனார்.

''முன்பின் தெரியாத ஒரு பெண்ணை எப்படி நம்பினீர்கள்? 200 ப்ராங்க் தொலைந்தாற் போலத்தான்!'' என்றார்.

கண்டிப்பாக ஒடைலை மறுபடி சந்திக்கப் போவதில்லை என்று நினைத்திருந்த நான் மறுநாள் மாலை தியேட்டர் வாசலில் அவர் டிக்கெட்டுகளுடன் நிற்பதைப் பார்த்துத் திகைத்துப் போனேன்!

தியேட்டரில் ஒடைலும் நானும் அருகருகில் உட்கார்ந்தோம். பாலே சுவாரஸ்யமாக இருந்தது. நான் அதை முழுவதும் புரிந்து கொண்டது ஒடைலுக்கு மிகுந்த சந்தோ

வத்தை அளித்தது. தரமான கலாச்சார விஷயங்கள் பலவற்றை அவர் தெரிந்து வைத்திருப்பதை நான் இடைவேளையின் போது பேசுகையில் கவனித்தேன். நிகழ்ச்சி முடிந்ததும் தன்னுடைய வீட்டில் நாங்கள் சாப்பிட வந்தே ஆகவேண்டும் என்றார். 'சமைத்து வைத்திருக்கிறேன்' என்றார்.

இவர் எந்த மாதிரி வாழ்க்கை வாழ்கிறார் என்று அறிய எனக்கும் மிக ஆவலாக இருந்தது.

அவருடைய வீடு சின்னதாகக் கச்சிதமாக மிக சுத்தமாக இருந்தது. பெரிய புத்தக அலமாரி நிறைய அருமையான புத்தகங்கள். நுழைந்த உடனேயே ரெக்கார்ட் ப்ளேயரில் ரவிசங்கரின் ஸிதார் வாத்தியத்தைப் போட்டார்.

''வெஜிடேரியன் சாப்பாடு உங்களுக்காக'' என்று ப்ரெட்டும் சீஸும் காலட்டுமாக மேஜையை நிரப்பி விட்டார். அவருடைய பிரியமான உபசாரத்தையும், ரஸனை மிகுந்த பேச்சையும் கவனித்த ஒவ்வொரு விநாடியும் எனக்குள் இனிய ஆச்சரியம் ஏற்பட்டது.

''தனியாக இருக்கிறீர்களே. உங்களுக்குக் குடும்பம் ஏதுமில்லையா?'' என்றேன்.

''பெரிய குடும்பத்தில் மூத்தவளாகப் பிறந்தேன். தந்தை இறந்தவுடன் இளையவர்களைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வரும் பொறுப்பேற்பட்டது. எல்லாரும் வளர்ந்து விட்டார்கள் இப்போது.''

''கல்யாணம் செய்து கொள்ளவில்லையா நீங்கள்?''

மெல் நிச்சலனமாய்ச் சிரித்தார்.

''எனக்கு விருப்பமில்லை. திருமணம் செய்து கொண்டால் என் உலகம் குறுகி விடும் — என்னுடைய கணவன் என் குழந்தைகள் என்று பிரியம் வைப்பதே சுயநலப் பிரியமாகிப் போகும். என் உலகம் பெரியதாக இருக்க வேண்டும். — I want to love the entire world!'' என்றார்.

---

பரீட்சையில் தோற்றால் பணம்! எங்கே என்கிறீர்களா? ஆஸ்திரேலியாவில்! பரீட்சை முடிவுகளை இன்ஷ்யூர் செய்து கொள்ளும் வசதி அங்கு உண்டாம். எதிர்பாராத விபத்துக்களினால் அல்லது உடல்நலக் குறைவால் தேர்வில் தோல்வி அடைந்தால்தான் பாலிஸிப் பணம் கிடைக்குமென்றாலும் மனோரீதியான தோல்விகளும் பரிசீலிக்கப்படும்!

—ஆர். எஸ். சுப்பிரமணியம்.



அவர் ஒரு வங்கியில் வேலை செய்வதாகவும், சம்பாதிக்கும் பணத்தையெல்லாம் உலகத்தைச் சுற்றிப் பார்க்கச் செலவழிப்பதாகவும் சொன்னார்.

அவர் வீட்டில் சாப்பிட்டு நாங்கள் கிளம்பும்போது மணி பன்னிரெண்டரை. எங்கள் ஹோட்டலுக்குப் போக இரண்டு ரயில்கள் மாற வேண்டும். எத்தனை சொல்லியும் கேளாமல் தானும் மறுபடி எங்களுடன் வந்து, தனியாகத் திரும்பிப் போனார்.

''நடு இரவில் தன்னந்தனியாகப் போகிறீர்களே, பயமில்லையா உங்களுக்கு?'' என்றேன்.

''பயமே இல்லை! இதுவரை எவனும் என்னிடம் வாலாட்டியதில்லை. நம்மைக் காப்பாற்றிக் கொள்வது நம் கையில்தான் இருக்கிறது!''

எனக்குத்தான் அவரது தைரியத்தைப் பார்த்து மிக அதிசயமாக இருந்தது. கொஞ்சம் கூட முரட்டுத்தனமோ ஆணவமோ இல்லாமல் மிருதுவாக அன்பாகப் பேசும் மெல் பாரதி கனவு கண்ட புதுமைப் பெண் என்று பரவசமேற்பட்டது.

இந்த விவரங்களைக் கேட்டதும் ஆன், ''நீங்கள் அதிர்ஷ்டம் செய்தீர்கள். அந்தப் பெண்ணிடம் ஏமாந்து போயிருந்தீர்களானால் எங்களுக்கு அவமானம் என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன்'' என்றார்.

ஃப்ரான்ஸில் இருந்த பதினைந்து நாட்களில் அதிர்ஷ்டவசமாக எனக்கு எந்த ஏமாற்றமும் ஏற்படவில்லை.

பாரீஸ் பல்கலைக் கழகம் மிக பிரும்மாண்டமானது. பிரசித்தி பெற்றது. மிகப் பெரிதாக வளர்ந்து விட்டதால் அதைப் பதினைந்து சுதந்திரப் பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்களாம்.

பாரீஸ் பல்கலைக்கழகத்தில் இருக்கும் தமிழ்ப் பிரிவைப் பார்க்க விரும்பி அங்கு பணிபுரியும் திரு. காசி, திரு. முடியப்பநாதனுடன் தொடர்பு கொண்டு சென்றேன். பல்கலைக் கழகக் கட்டிடமெல்லாம் நம்மூர் கல்லூரிக் கட்டிடம் மாதிரி சுவரெல்லாம் கிறுக்கல்களாக இருந்தன. மாணவர்கள் தங்கள் கருத்துக்களைக் காரசாரமாகத் தெரிவித்திருந்தார்கள். இங்கு 1968-ல் மிகப்பெரிய மாணவர் புரட்சி நடந்தது எனக்கு நினைவு வந்தது.

நான் சென்றபோது தமிழ் வகுப்பில் இருவரே. இரண்டு தமிழ் மாணவர்கள் தமிழ்ப் பரீட்சை எழுதிக் கொண்டிருந்தார்கள். மலேசியாவைச் சேர்ந்தவர்கள். அதிக மாணவர்கள் இல்லை என்று திரு. காசியும், முடியப்பநாதனும் சொன்னார்கள். தங்களுக்குக் கிடைக்கும் மீதி நேரத்தை தமிழ் இலக்கியத்தை ஃப்ரெஞ்சு பாஷையில் மொழி பெயர்த்து வெளியிடுவதாகச் சொன்னார்கள்.

பாண்டிச்சேரியைச் சேர்ந்த தமிழ் அன்பர்கள் நிறைய பேர் ஃப்ரான்ஸில் குடியேறியிருப்பதை அறிந்து கொண்டேன். தமிழைவிட ஃப்ரெஞ்சைச் சரளமாகப் பேசுகிறார்கள்.



# கோல்டன் வீக்லி

"வெள்ளிதோறும் அள்ளித்தரும்"
லாட்டரி "கோல்டன் வீக்லி"
வாராந்திர லாட்டரிகளிலேயே
மிக அதிகமான பரிசுகளைத் தரும்
ஒரே லாட்டரி!
வென்றிடுவீர் பரிசினை !!

ஒவ்வொரு 100. டிக்கட்டுகளுக்கு
7 பரிசுகள்
உத்தரவாதம்

முதல் பரிசு. ரூ
1 லட்சம்

டிக்கட் விலை
ரூ. 1/-
முதல் குலுக்கல்
13.1.84

2ம் பரிசு (4) ரூ. 10,000 வீதம்,
இன்னும் ஆயிரக்கணக்கான பரிசுகள்
உண்டு.
மொத்தப் பரிசுகளின் எண்ணிக்கை } 144,208

வாங்கிடுவீர் இன்றே!
வென்றிடுவீர் பரிசினை!



பூர்ண விற்பனையாளர் :

மெஸர்ஸ் : நிர்மல் ஏஜன்சி.
12, எஸ்.எஸ். தெரு, வீனஸ் காலனி,
சென்னை-18. போன் : 440045

வெளியிடுவோர் :
இமாசல பிரதேச ஸ்டேட் லாட்டரீஸ்,
சிம்லா.

"முப்பது வருடங்களாக இந்தியாவில் அதிக முன்னேற்றமில்லை. வாழ்க்கைத்தரம் உயரவில்லை. அதனால் தான் எனக்கு இந்தியாவுக்குத் திரும்புவதில் நாட்டமில்லை" என்றார் ஒருவர்.

"வேர்கள் என்று எதைச் சொல்லுறீர்கள்?" என்றார் இன்னொருத்தர். "அதுவும் மனிதனின் கற்பனைதானே? அவனாக ஏற்படுத்திக் கொண்ட பிரமை தானே? நம்மைச் சேர்ந்தது, நம்முடன் தொடர்வது என்பது எதுவுமே இல்லை. எந்த ஊரில் எந்த தேசத்தில் இருந்தாலும் ஒன்றுதான்!"

ஆனால் தமிழ்நாட்டைச் சேர்ந்த பெண்மணி என்கிற ஆவலுடன் என்னிடம் தமிழில் (வித்தியாசமான உச்சரிப்புகள்) பேசும்போது அவர்கள் முகத்தில் தெரிந்த சந்தோஷத்திற்கு விளக்கம் இல்லை.

நான் கொடுத்த தமிழ்ப் புத்தகங்களை வெகு ஆர்வத்துடன் வாங்கிக் கொண்டு படித்து மறுநாளே தங்கள் சந்தோஷத்தைத் தெரிவித்தார்கள். யுனெஸ்கோவில் பணிபுரியும் ஒரு தமிழ்ப் பெண் (பாண்டிச்சேரியைச் சேர்ந்தவர்) புத்தகத்தைப் படித்தவுடன் என்னிடம் காண்பித்த பிரியத்தையும் கனிவையும் மறக்க முடியாது.

நீஸில் நடக்கவிருந்த உலக எழுத்தாளர் மகாநாட்டுக்குக் கிளம்ப வேண்டிய நாள் வந்து விட்டது. அன்று மதியம் ஒரு பிரும்மாண்டமான 'ஆபரா ஷோ' பார்க்க மினிஸ்ட்ரி ஏற்பாடு செய்திருந்தது. 'யேசு என்ற பெயர் கொண்ட மனிதன்' என்ற இசை, நாட்டிய, நாடகம், ஃப்ரெஞ்சில்.

ஐம்பதினாயிரம் பேர்கள் உட்கார்ந்து பார்க்கக் கூடிய பெரிய ஸ்டேடியத்தில் நடு மையத்தை அரங்கமாக மாற்றி அவர்கள் காட்டிய அற்புதத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. ஒரே இடத்தை ஒலி ஒளி மாற்றத்தால் மிக வித்தியாசமாகக் காட்சிக்குத் தகுந்தாற்போல் மாற்றி அமைத்தது மாய வித்தை போல் இருந்தது. பைபிளின் கதை எல்லாருக்கும் தெரியுமாதலால் ஆப்பராவைப் புரிந்து கொள்வது கஷ்டமில்லாமல் இருந்தது. எல்லாப் பெற்றோர்களும் தங்கள் குழந்தைகளையும் அழைத்து வந்திருந்தார்கள். குழந்தைகள் கூட சத்தம் போடாமல் அரங்கில் கட்டுப்பாட்டுடன் இருந்தனர்.

இதைத் தயாரிக்க இரண்டு ஆண்டுகள் ஆயிற்றாம்! சின்ன விஷயத்திலும் கவனம் செலுத்தி மிக உயர்ந்த கலைப் படைப்பாய், கொஞ்சமும் பிரச்சாரத் தனமில்லாமல் உருவாக்கியிருப்பது பிரமிப்பை ஊட்டுகிறது.

சிலப்பதிகாரத்தை இப்படி இயக்கினால் எத்தனை நன்றாக இருக்கும் என்ற நினைப்பின் விளைவாய் ஆப்பரா பார்த்த கையுடன் விமான நிலையம் சென்று எங்களது புதிய மொழி பெயர்ப்பாளர் பார்பராவுடன் நீஸுக்குப் பயணம் ஆன போது வழி நெடுக அவருக்கும் திரு. ஸத்துவுக்கும் சிலப்பதிகாரத்தை முழுவதும் சொல்லி முடிக்கையில் உணர்ச்சி வசப்பட்டுப் போனேன்!

(தொடரும்)

# தேங்காய் இல்லாத சமையல் ஒரு சமையலா?

○ சே. புகழேந்தி, பழனி.

? மண்ணில் கால் படாமல் கண்ணில் நீர் படாமல் யாரை யார் காப்பது?

! விமானப் படையைச் சேர்ந்த ஹெலிகாப்டரில் பறந்து (தமிழக அரசின் சொந்த ஹெலிகாப்டர் என்ன ஆயிற்று?) வெள்ளச் சேதத்தைப் பார்வையிட்ட முதல்வரை நீங்கள் மனத்தில் நினைத்துக் கொண்டு இந்தக் கேள்வியை எழுப்புகிறீர் போலும். ஆனால் ஒன்று. அவர் மண்ணில் கால் வைக்கப் பயப்படுகிறவர் அல்ல. முதல்வர் பாத யாத்திரையாகப் போய்க் கொண்டிருந்தால் பல காரியங்களில் கால தாமதங்கள் தவிர்க்க முடியாது போகும். காலம் எவ்வளவோ மாறி விட்டது. செயலில் வேகம் தேவைதான். நடந்து போய்த்தான் வெள்ளச் சேதத்தைக் கணிக்க முடியும் என்பதுமில்லை. அவருக்கு அதிகாரிகள் சரியான புள்ளி விவரங்களைத் தர இயலும்.

○ பி. ராமகிருஷ்ணன், மேலக்கிருஷ்ணன்புதூர்.

? இந்திராவின் அடுத்த ஆடம்பரச் செலவு எதுவாக இருக்கும்?

! பொதுத் தேர்தல்.

○ ஆர். சுப்பராவ், திருக்கோவிலூர்.

? பண்ருட்டி ராமச்சந்திரன் ஐ.நா. பயணம் பெருவெற்றி பெற்றுவிட்டதே?

! ஐ.நா.வில் அவர் பாரதத்தின் நிலையை விளக்கியது சிறப்பாயிருந்தது. ஆனால் இதில் வெற்றி தோல்வி எங்கே வந்தது? ஈழத் தமிழர் பிரச்னையில் இலங்கை அரசுடன் நடக்கும் பேச்சுவார்த்தைகளில்தான் வெற்றி தோல்வி நிர்ணயிக்கப்பட வேண்டுமேயொழிய ஐ.நா சபையில் ராமச்சந்திரன் நிகழ்த்திய சொற்பொழிவால் அல்ல. அவர் அமெரிக்காவில் சென்றுவந்த வேறு இடங்களில் பெற்ற அனுபவங்களை தமிழ்நாட்டுக்கு எந்த அளவில் பயன்படுத்தி வளம் கொழிக்கச் செய்யப் போகிறார் என்பதில் வெற்றி தோல்வியை இப்போது காண்பதற்கில்லை. ஆனால் ஒரு விஷயத்தில் அவர் ஏற்கெனவே பெருவெற்றி பெற்று விட்டார். விமான நிலைய வரவேற்பின் விளைவாக ஏர் லைன்ஸ் நிறுவனத்துக்கும், பயணிகளுக்கும் சொல்லி மாளாத தொந்தரவையும் கஷ்டநஷ்டத்தையும் தருவதில் பெருவெற்றி! வெளிநாட்டிலிருந்து வரும் தலைவர்களுக்கு விமான நிலையத்திலேயே வரவேற்பு தர அவசியமில்லை; அதைக் கடற்கரையிலோ, வேறு மைதானத்திலோ வைத்துக் கொள்ளலாம் என்பதை அரசியல் கட்சிகள் புரிந்து கொள்வது நலம்.

○ என். சக்திவேல், பழனி.

? ஸாயிட்டைச் சந்தித்தால் என்ன கேட்பீர்கள்?

! 'அது எப்படி ஸார் புருடென்ஷியல் கோப்பைப் பந்தயத்தில் தோற்றுப் போகிற அபார சாதனையைப் புரிந்தீர்கள்?' என்று வினவுவேன்.

○ எம். ராஜேந்திரன், லால்குடி.

? கலெக்டர் மூலம் கலைநிகழ்ச்சி வைத்துத் தமிழக முதல்வர் லட்சக்கணக்கில் வசூல் செய்ய அதனை ஆந்திர முதல்வர் அனுசரிக்காமல் தமது மாநில வெள்ள நிவாரண நிதிக்கு வாங்கிச் செல்ல நிலைமை எப்படி இருக்கிறது பார்த்தீர்களா?

! மத்திய அரசை வெள்ள நிவாரணத்துக்கு விசேஷ உதவி புரியுமாறு மாநிலம் கேட்க, புதுதில்லி ஐந்து கோடி தர, என்.டி. ஆர்., யாரும் கேளாமலே தமிழக வெள்ள நிவாரண நிதிக்கு பத்து லட்சம் நன்கொடை அளிக்க.... நிலைமை எப்படி இருக்கிறது பார்த்தீர்களா?

○ ம. ரங்கநாயகி, குன்னத்தூர்.

? ஏகாத்மதா யக்ஞம் சென்னை வந்தடைந்த போது ம.வி.யில் ஏன் ஒளிபரப்பவில்லை? யாத்திரை தொடங்குமுன்னரே இந்திரா தமது அதிருப்தியை வெளிப்படுத்தினாரே அதனாலா?

! கேள்வியிலேயே பதிலையும் கூறி எனக்கு வேலையில்லாமல் செய்து விட்டீர்களே, பேஷ்!

○ ஓ. ராஜேந்தர், நாகப்பட்டினம்★

? விளம்பரம் இல்லாத புகழ் கிடைக்க என்ன செய்ய வேண்டும்?

○ எதில் வெற்றி?

○ என்ன கேட்பீர்?



நீங்கள் பிரதமராயிருக்க வேண்டும். அயல்நாட்டுப் புத்தக நிறுவனத்தை உங்கள் புத்தகத்தைப் பிரகரிக்கச் சொல்ல வேண்டும். 'விற்காதே' என்று அவர்கள் தயங்கினால் கவலே வேண்டாம். ஒரு பிரதி 135 ரூபாயானாலும் பாரத அரசே மக்கள் வரிப்பணத்தைக் கொட்டி நிறைய வாங்கிக் கொள்ளும் என்று கூற வேண்டும். ஆயிரக்கணக்கில் பிரதிகளே பி. ஐ. பி. இலாக்கா மூலம் வாங்கி சோகம் போன்ற சர்வதேச மாநாட்டுக்கு வரும் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு இலவசமாக வழங்கி விடவேண்டும். பதிப்பகத்தினர் தரும் ராயல்டியைப் பாக்கெட்டில் போட்டுக்கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் அது விளம்பரமாகாது. புகழ், பணம் இரண்டும் கிடைக்கும்.

○ சுமாலி, மேலப்பாலையூர்.

? லஞ்ச ஊழல் குற்றம் புரிந்ததாக நீதிமன்றத்தால் தண்டிக்கப்பட்ட ஜப்பானிய முந்நாள் பிரதமர் தனகா மக்களால் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளாரே?

! அவருடைய சொந்தத் தொகுதியில் அவருக்கு மக்களிடையே செல்வாக்கு இன்னும் இருக்கலாம்; அந்த வெற்றிக்கு அவரது பண பலமும் உதவியிருக்கலாம். ஆனால் பலவிதங்களில்மோசடிகள் செய்துள்ள தனகாவைக் கட்சியைவிட்டு வெளியேற்றுவதும் பகிரங்கமாகக் கண்டிக்காததுமே அவர் சார்ந்துள்ள கட்சி பல தோல்விகளைத் தழுவ முக்கிய காரணமாய் அமைந்தது.

○ டி. இராஜேந்திரன், திருப்பூர்.

? இ. காங்கிரஸ் மாநாட்டுக்கு முதல்நாள் வராமல் இந்திரா வந்து அமைத்த பிறகு வந்தவர்கள் பற்றி...?

! பிகு திலகம்.

○ ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? தேங்காய் இல்லாத சமையல் ஒரு சமையல் தானா?

! இப்படியா கேட்பார்கள்? கொஞ்சமாவது 'இது' வேண்டாமா? 'சீச்சீ தேங்காயைப் போய்த் தின்பானா மனுஷன்' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டே சாப்பிட உட்காருவீரா.....

○ திருமதி லட்சுமி நடராஜன், திருப்பூர்.

? பரத நாட்டியக் கலைஞர் தனஞ்செயன் காட்டமான பேச்சு பற்றி என்ன நினைக்கிறீர்?

! 'பரவாயில்லே, தைரியமாகப் பேசுகிறாரே' என்று வியந்தேன்; ஆனால் எக்ஸ்பிரஸில் 'நான் அப்படிச் சொல்லவில்லே; கப்புடு திரித்து எழுதிவிட்டார்' என்று கடிதத்தைப் படித்த போது 'சரி, கலைஞர்களும் அரசியல்வாதிகளாக மாறுகிறார்கள்' என்று நினைத்தேன்.

○ ரா. செந்தில், விழுப்புரம்.

? வறட்சி நிவாரணப் பணியையடுத்து இப்படி வெள்ள நிவாரணப்பணி நடத்தும்படியாகி விட்டதே?

! வெள்ளத்தால் உயிர்ச் சேதமும் மக்கள் துயரமும் மிகுந்த விசனமளிப்பது என்றாலும் வறட்சியைவிட வெள்ளம் மேல். காரணம் வெள்ளம் வடிந்ததும் விவசாயம் கொழிக்கும். அதிகாரிகள் திறம்பட செயல்பட்டு நிவாரணப் பணிகளை நடத்துவதுடன் ஏரி, குளங்களைச் செப்பனிட்டு மழை நீரைச் சாமர்த்தியமாகப் பயன்படுத்திக் கொள்ளவும் வழிவகுக்க வேண்டும்.

○ ராகவன், விருதுநகர்.

? கச்சேரிகளுக்குப் போயிண்டிருக்கேளா?

! கேட்டே ஆகணும்னு இஎம்பறதில்லே அண்ணா! அந்தப் பரபரப்பு எனக்குப் பிடிக்காது. அவகாசமிருந்தால்போறேன். இந்த சென்லே கர்நாடக சங்கீதக் கச்சேரிக்கு இயூ நின்னு பார்த்தது, மாண்டலின் சீனிவாசனுக்குத் தான். கடவுள் அருள்பெற்ற அந்தக் குழந்தை கச்சேரி பண்ணி ஜமாய்க்கிறது ஒருபக்கம் இருக்கட்டும். கோல்ட் ஸ்பாட் கேட்டு வாங்கிக்குடிச்சதையும் கச்சேரியை முடிக்க மனமில்லாமல் சிரிச்சபடி வாசிச்சண்டே இருந்து கிருஷ்ணகானசபா காரியதரிசி யக்ஞராமனே அடுத்த கச்சேரிக்கு நாழியாகி விட்டதால் தவிக்க வைச்சதையும் ரொம்ப ரசிச்சேன். அன்னிக்கு வெராமனும், விஜயகராமும் கணகணன்னு ஒரு தனி ஆவர்த்தனம் வாசிச்சா பாருங்கோ, கைத்தட்டலே நிறுத்த வே ரசிகாளுக்கு மனசு வரலேன்னா!



○ நவிக்க வைத்ததும்...



○ காட்டமான பேச்சு!

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஓ. ராஜேந்தர்,
24, அரியபத்திரபிள்ளே தெரு,
நாகப்பட்டினம் 611 001.

○ மோசடி மன்னர்





## யாருக்க பயமேன்

அச்சமில்லே,நானிருக்க' என்று வாய்திறந்துபின்
அமைதியான சிலேயாகிப் போன முருகனுக்கென்ன!

உயிரில்லா சம்பவங்கள், உணர்வில்லா வசனங்கள்,

தெளிவில்லா கதைத் தொகுப்பு, உயர்வில்லா இசை அமைப்பு என

குதறிய கதம்பமாய் தமிழ்த் திரையில் கண்டு

உதறிக்கொண்டு ஓடும் துக்கம் பக்தரின் தலேயில் தானே?





## இல்லயஞார் மாதா.

மரியைத் தரிசித்த மாதா புகழை

மண்ணில் பரப்ப வேறு வழியா இல்லே?

ஊர்ப்பட்ட நடிகர்களே ஒன்ருகக் காட்டி விட்டால்

நேர்ப்பட்டுப் போகுமோ நலிந்து போன கதையழகு.

ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளே ஒழுங்காகச் சொன்னுலே
நன்ருக இருந்திருக்கும் நயமாக வந்திருக்கும்.

-ஜெயமன்மதன்



## ஆக்டோபஸ்ஸி திரைக்கதையின் தமிழ் வடிவம்

### இரண்டாம் பாகம்

கமல்கான் தன் விதியை நொந்து கொண்டிருந்தான். அவனைச் சூழ்ந்திருந்த அழகுகளை ரசிக்க விடாமல் அவனைக் கேள்விக் கணைகளால் துளைத்தெடுத்துக் கொண்டிருந்தாள் ஆக்டோபஸ்ஸி. செதுக்கிய சிற்பம் போன்ற முகத்தழகு, பளபளக்கும் கருங் கூந்தல், மோகிக்கச் செய்யும் மேனி எழில்—இவ்வளவும் இருக்க, கனல் தெறித்த அவள் கண்கள் கமல்கானை நடுங்கச் செய்தன. அசத்தும் அவள் அழகையோ, ஆடம்பர மான அவளது மிதக்கும் மாளிகையையோ, சூழ்ந்திருந்த அவளுடைய பெண் பணி யாளர் படையையோ தலைநிமிர்ந்தும் பார்க்க முடியாத நிலை அவனுக்கு.

''ஃபேபர்க் முட்டை கிடைத்துவிட்டது'' என்று நடுக்கத்துடன் கூறியவனைக் குறுக் கிட்டாள்.

''அது திருட்டுப் போகும் வரை என்ன செய்து கொண்டிருந்தாய்? திருடியவனுக்கு நம்மைப் பற்றி எல்லா விவரங்களும் தெரிந்து போயிருக்குமே!''

''அவன் என் அரண்மனையில் தான் இருக்கிறான். இங்கே அழைத்து வருகிறேன். அவனுக்கு நம்மைப் பற்றி எவ்வளவு தெரியும் என்று கண்டுபிடித்து விடலாம்.''

''யார் அவன்?''

''அவன் பெயர் ஜேம்ஸ்பாண்ட். ஆங்கி லேயன்'' என்றான் கமல்.

ஆக்டோபஸ்ஸியின் கண்களில் கத்திகள் மின்னின. அவள் எதிரே இருந்த நீர்த் தொட்டியில் தன் எட்டுக்கால்களையும் நெளித்தும், வளைத்தும், நீட்டியும் நீந்திக் கொண்டிருந்த ஆக்டோபஸ்ஸை உற்று நோக்கினாள். ''சரி, அழைத்து வா'' என்றாள்.

தன் அரண்மனைக்குத் திரும்பிய கமல் கானுக்குக் கடுப்பு அடங்கவில்லை. ஒரு பெண் அவனை என்ன பாடுபடுத்தி விட்டாள்? போதாக் குறைக்கு ஜேம்ஸ்பாண்ட் வேறு எரியும் தீயில் எண்ணெய் ஊற்றுகிறான்.

''என்னை எதற்காக இங்கு அழைத்து வந்தாய்? நீ தேடிய ஃபேபர்க் முட்டை இப்போது உன்னிடம் தானே இருக்கிறது.''

''நான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் நீ பதில் சொல்லவில்லை. அதைச் சொல்ல வைத்து விட்டு உன்னை விடுதலை செய்து விடு கிறேன். அப்போது நீ உயிரோடு இருந் தால்'' என்று கூறிய கமல்கான் ஜேம்ஸ் பாண்டை சிறை வைக்க உத்தரவிட்டான்.



## அழகிய முகம்: ஆக்டோபஸ்ஸி

தனியே விடப்பட்ட ஜேம்ஸ்பாண்டின் மனக்கண்முன் கமல்கானின் மிரட்டல் பயங்கரமாய் விரிந்தது. சித்திரவதை காரணமாக புத்தி பேதலித்துப் பைத்தியமானவர்களை அவன் அறிவான்.

சிறிது யோசித்து விட்டுச் சட்டைப்பையிலிருந்த பேனாவை எடுத்தான். கனமான இரும்புக் கம்பிகள் போடப்பட்ட ஜன்னலை நெருங்கினான். பிரிட்டிஷ் ஒற்றர் படையின் இந்தியக் கிளை அலுவலக விஞ்ஞானியை வாழ்த்தியவாறே பேனாவிலிருந்த சக்தி வாய்ந்த அமிலத்தைப் பயன்படுத்தி ஜன்னல் கம்பிகளை உருக்கி, நெளித்து வழி ஏற்படுத்தினான். ஜன்னலை ஒட்டிய குறுகலான விளிம்பில் இறங்கி நடக்க ஆரம்பித்தான். அவன் சிறை வைக்கப்பட்டிருந்த அறை மேல் மாடியில் இருந்தது. அடுத்திருந்த அறையின், பெரிய, கம்பிகளற்ற ஜன்னலைக் கடக்கும் போது திடீரென்று கண்களைக் கூசச் செய்த பேரொளி ஆகாயத்தில் தோன்றியது. அந்த வெளிச்சம் அரண்மனையை நோக்கி வரும் ஹெலிகாப்டரினுடையது என்பதை சீக்கிரமே தெரிந்து கொண்டு அருகே இருந்த ஜன்னலுக்குள் குதித்தான் பாண்ட். சுவரோடு சுவராக இருட்டில் மறைந்து கொண்டு மெல்ல எட்டிப் பார்த்தான்.

ஹெலிகாப்டர் கீழே இறங்கியிருந்தது. அதன் மீது ரஷ்ய ராணுவத்தின் சிவப்பு நட்சத்திரச் சின்னம் பளிச்சென்று தெரிந்தது. ஹெலிகாப்டரிலிருந்து இறங்கியவரின் முகமும் பாண்டுக்குத் தெரிந்த முகமே — உலக சமாதானத்தைக் குலைக்கக் கங்கணம் கட்டியிருந்த ஜெனரல் ஆர்லோவ். கமல்கான் முன்னின்று ஜெனரலை வரவேற்றான்.

• • •

ஆர்லோவ் திருப்தியுடன் புன்னகைத்தார். கமல்கானின் மாளிகையில் இரகசிய அறை ஒன்றில் நகைக் குவியலை ஆராய்ந்து கொண்டிருந்தார். அக்குவியலின் மத்தியில் ஃபேபார்க் முட்டை கம்பீரமாய் உட்கார்ந்திருந்தது.

''மனமார்ந்த பாராட்டுக்கள்! ஒவ்வொன்றும் தத்ரூபமாய் இருக்கிறதே. இவை எல்லாம் போலி என்று சொன்னாலும் நம்ப மாட்டார்கள்.'' ஆர்லோவின் புகழுரையைக் கேட்டு கமல்கானுக்கு உச்சி குளிர்ந்து விட்டது.

''ஹெலிகாப்டரில் ஏற்றச் சொல்லட்டுமா?'' என்றான் பணிவுடன்.

''உன் ஆட்களை நம்பலாம் அல்லவா?''

''தாராளமாக. அவர்களின் நன்னடத்தைக்கு நான் முழுப் பொறுப்பு.''

''என் ஆசை நிறைவேறியதும் நிஜ நகைகளை உனக்கு அனுப்புகிறேன்.''

வெளியே இருட்டோடு இருட்டாக ஒளிந்து கொண்டிருந்த பாண்ட் பேனாவில் பொருத்தியிருந்த ஒலி பெருக்கியின் துணையுடன் இந்த உரையாடலைக் கேட்டுக்கொண்டிருந்தான். ஆர்லோவின் ரகசியங்கள் அம்பலமாகிக் கொண்டிருந்தன.

''குறித்த நேரத்தில் காரியம் தவறாமல் நடந்து விட வேண்டும். அது தான் ரொம்ப முக்கியம். திட்டத்தில் எந்த மாறுதலும் கூடாது. இன்னும் சரியாக ஒரு வாரத்தில் கார்ல்மார்க்ஸ் மாநிலத்தில் சந்திப்போம்.''

விடைபெற்ற கணத்தில் ஆர்லோவின் கண்களில் பட்டது ஃபேபார்க் முட்டை. ''ஆ. இது கிடைத்து விட்டதா? இந்தப் போலியினால் ஏற்பட்ட தொல்லைகள் போதும்'' என்று கூறியவாறே உறையிலிருந்து துப்பாக்கியை உருவி அதன் பின்புறத்தால் முட்டையை ஓங்கி அடித்தான். சுக்கல் நூறாகத் தெறித்து விழுந்தது அந்தப் பொக்கிஷம்.

கமல்கானின் உடல் ஒருமுறை நடுங்கியது. தான் அழித்தது அசல் ஃபேபார்க் முட்டையைத்தான் என்பதை ஆர்லோவ் உணரவில்லை. ஒரே போடில் பல கோடி பெறுமானமுள்ள பொக்கிஷம் பறிபோயிற்று.

திடீரென்று ஒரு சிறிய உலோகத்துண்டு கமலின் கண்களுக்குத் தென்பட்டது. ஃபேபார்க் முட்டையிலிருந்து சிதறிய அதை உடனே அடையாளம் கண்டு கொண்டான் கமல். அந்த ஒலிபரப்புக் கருவியை முட்டைக்குள் பொருத்தியிருக்கக் கூடியவன் ஜேம்ஸ்பாண்ட் ஒருவன்தான்.

''கோவிந்தா உடனே பாண்டை அழைத்து வா'' என்று கட்டளையிட்டான்.

பேனாவிலிருந்த ஒலிபெருக்கி இயங்கவில்லை என்று அறிந்தவுடன் ஆபத்து தன்னைத் தேடி வர வெகு நேரம் ஆகாது என்று தீர்மானித்தான் பாண்ட். அவன் ஒளிந்திருந்த அறைக்கு அருகே இருந்த மற்றொரு கதவைத் திறந்தான். அது ஒரு பெரிய குளிர் பதன அறை. உள்ளே பெரிய மாமிசத் துண்டங்கள் ஆணிகளிலிருந்து தொங்கின. அவற்றின் அருகே வெள்ளைத் துணியில் சுற்றப்பட்ட மனிதச் சடலங்களும் இருந்தன!



ஒருகணம் பாண்டின் முதுகுத் தண்டு சில்லிட்டது. அடுத்த கணம் மின்னல்போல ஒரு சிந்தனை வெட்டு. அருகே இருந்த வெள்ளைத் துணியால் தலை முதல் கால்வரை போர்த்திக் கொண்டு அந்தச் சடலங்களுக்கருகே படுத்தான். சற்று நேரத்துக்கெல்லாம் கமல்கானின் ஆட்கள் வந்து சடலங்களை வெளியேற்றினர். மூன்றாவதாக ஒரு சடலம் இருப்பதைக் கண்டு இலேசாக ஆச்சரியப்பட்டனர். பின்னர் இப்படி எண்ணிக்கை திடுமென அதிகரித்திருப்பது கமல்கானின் மாளிகையில் 'சகஜம்தானே' என்று எண்ணியவாறே பாண்டையும் வெளியேற்றினர். திறந்தவெளியில் கழுகுகளுக்கு விருந்தாகக் கிடத்தப்பட்ட சடலங்களுக்கருகே அவன் உடலையும் வைத்தனர். அடுத்த கணம் திடீரென்று எழுந்து நின்ற 007–ஐக் கண்டு பேயோ, பிசாசோ என்று திகைத்தனர். அவர்கள் தங்களைச் சுதாரித்துக்கொள்வதற்கு முன் அங்கிருந்து ஓட்டம்பிடித்தான் பாண்ட்.

கமல்கானின் தோட்டம் கானகம்போல் இருந்தது. அடர்த்தியாக மண்டி வளர்ந்திருந்த செடி, கொடி, மரங்களைத் தாண்டி அதி வேகமாய்ச் சென்றான் 007. பலமுறை நெருங்கி வந்த காவலர்களை ஏமாற்றிவிட்டு காடு போல் செடிகளும், மரங்களும் மண்டிக் கிடந்த அரண்மனைத் தோட்டத்திலிருந்து ஒரு வழியாக தப்பி ஓடினான். சுற்றிலும் திறந்தவெளியாய் இருந்தது. அதையொட்டி சலசலத்த நீர்ப் பரப்பில் மிதந்து வந்தது ஒரு மோட்டார் படகு. கடைசி முறையாகத் திரும்பிப் பார்த்துவிட்டு அப்படகை நோக்கி விரைந்தான் பாண்ட். ஆற்றிலிறங்கி, நீந்தி, உல்லாசப் பயணிகளை ஏற்றிச் சென்ற அப்படகை நிறுத்தி ஏறிக் கொண்டு தப்பினான்.

உதய்பூர் ஏரியில் மிதந்து கொண்டிருந்த உல்லாசப் படகில் பறந்த கொடி 007 கண்களைக் கவர்ந்தது. மகதாவின் முதுகில் பச்சைக் குத்தியிருந்த அதே பயங்கர எட்டுக்கால் பிராணிச் சின்னம் அதில் பொறிக்கப்பட்டிருந்தது. பிரிட்டிஷ் அரசின் ஒற்றர் படையைச் சேர்ந்த ரகசியக் கிளை அலுவலகத்துக்கு மறுபடி சென்று விசாரித்தான். பெரும் பணக்காரியான ஆக்டோபஸ்ஸி என்பவளின் மிதக்கும் அரண்மனையைச் சேர்ந்தது அப்படகு என்பது தெரிய வந்தது.

''யார் அவள்?''

விஜய் வழக்கம்போல் உபயோகமான தகவல்களைச் சொன்னான். ''அவள் உண்மைப் பெயர் யாருக்கும் தெரியாது. ஆனால் ஆக்டோபஸ்ஸி என்று சொன்னால் குழந்தைக்குக் கூடத் தெரியும்! அவள் வசிக்கும் தீவில் பெண்கள் மட்டுமே உள்ளனர். உதய்பூர் ஏரியின் மத்தியில் இருக்கும் இத்தீவுக்குள் ஆண்களை அனுமதிப்பதில்லை.''

''அப்ப நான் கட்டாயம் அங்கே போயே ஆக வேண்டும்'' கண்களைச் சிமிட்டிக் கொண்டே சொன்னான் பாண்ட்.

• • •

இருட்டில் மறைந்து பதுங்கிப் பதுங்கி ஆக்டோபஸ்ஸியின் அரண்மனையை நெருங்கினான் பாண்ட். ஆனால் ஆங்காங்கே மறைவாகப் பொருத்தப்பட்டிருந்த டி. வி. காமிராக்கள் அவன் வருகையை ஆக்டோபஸ்ஸிக்கு அறிவித்துக் கொண்டுதானிருந்தன. தேடி அலைந்து, ஒருவழியாக ஆடம்பரமாக அலங்கரிக்கப்பட்ட அவள் அறையை அவன் அடைந்தபோது தேன் சிந்தும் இனிய குரல் அவனை வரவேற்றது.

''குட் ஈவினிங் மிஸ்டர் பாண்ட்! உங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன்.''

குரல் வந்த திசையில் நோக்கினான் 007. ஒயிலாகச் சாய்ந்து படுத்திருந்தாள் ஆக்டோபஸ்ஸி. மெல்ல எழுந்து அவனை நெருங்கினாள். முப்பது வயதிருக்கும். நல்ல உயரம். அதிரச் செய்யும் அழகு — அழகிகள் நிறைந்த அந்தத் தீவில் அழகுக்கு அழகூட்டும் பாவை!

''ஓ நீதான் அந்த மர்ம நங்கை ஆக்டோபஸ்ஸியா?'' 007 கண்கள் வியப்பையும், பாராட்டையும் வெளிப்படுத்தின.

''ஓ! நீதான் உலகப் புகழ் 007 ஆ?'' சளைக்காமல் அவளும் தைரியமாய் வினா எழுப்பினாள். ''கொல்வதற்கு உனக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டிருப்பது தெரியும். இன்று என்னைக் குறி வைத்திருக்கிறாயாக்கும்!''

''இருக்கலாம். ஆனால் நகைகளைக் கள்ளக் கடத்தல் செய்யும் விதம் பற்றி முதலில் உன்னிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது.'' அனல் தெறித்தது அவள் வார்த்தைகளில்.

அடுத்த விநாடியே தன்னைச் சாந்தப்படுத்திக் கொண்டு மதுக்கோப்பைகளை நிரப்பியவாறே பேசினாள்: ''இதற்கு முன்பே நீ என் வாழ்க்கையில் குறுக்கிட்டிருக்கிறாய்.. மேஜர் டெக்ஸ்டரை நினைவிருக்கிறதா?''

---

அரசன்: ''நம் நாட்டிலுள்ள தமிழ்ப் புலவர்கள் என் ஆட்சிக்கு எதிராக எழுதி வருவதை எப்படி அமைச்சரே தடுப்பது...?''

அமைச்சர்: ''அபாயகரமான ஆயுதங்கள் தடைச் சட்டத்தின் கீழ் அவர்கள் எழுத்தாணிகளைப் பிடுங்கிவிட வேண்டியதுதான்!''

—உ. ராஜாஜி.



எதிரே வண்ணப்படம்: ஆக்டோபஸ்ஸி திரைப்படத்தில் ஒரு காட்சி ▶



கத்தி, அரிவாள், பிச்சுவா, அம்பு, வெட்டுக்கத்தி, முள்ளு, மண்வெட்டி, கட்டாரி போன்ற பயங்கர ஆயுதங்களுடன் குருவாயூரப்பனுக்கு ஒருவர் துலாபாரம் நடத்தி உள்ளார். காரணமில்லாமல்போகவில்லை. அவர் இம்மாதிரி ஆயுதங்களைத் தயாரிக்கும் ஒரு மெட்டல் கம்பெனி அதிபர்! —எஸ்.எஸ்.மணி.

"ஓ! தங்கக் கடத்தலில் ஈடுபட்ட அந்த ராணுவத் தளபதிதானே? அவரை இலங்கையில் கண்டுபிடித்து கோர்ட்டில் சரணடைய இருபத்தி நாலு மணி நேரம் அவகாசம் கொடுத்தேனே!"

"ஆமாம்! அவர் விசாரணைக்குள்ளாகி தலைகுனிவதைக் காட்டிலும் தற்கொலையே மேல் என்று கருதினார்... அவர் என் அப்பா..." ஆக்டோபஸ்ஸியின் குரல் கரகரத்தது.

கதவு தட்டப்பட்டது. இறுக்கமான வெப்பு உடை அணிந்த பெண் ஒருத்தி நுழைந்தாள். கமல்கானின் வருகையை அறிவித்து விட்டு வெளியேறினாள்.

ஜேம்ஸ்பாண்ட் தப்பி ஓடிய செய்தியை ஆக்டோபஸ்ஸியிடம் எப்படிச் சொல்வது என்று பயந்தவாறே உள்ளே நுழைந்த கமல்கான் 007-ஐப் பார்த்துத் திகைத்தான். பின் சமாளித்துக் கொண்டு "தப்பி ஓடிவிடலாம் என்று நினைத்தாயா? உன்னை..." என்று அவன் மீது பாயத் தயாரானான்.

"அவரை நான் கவனித்துக் கொள்கிறேன்!" ஆணையிட்ட ஆக்டோபஸ்ஸியின் குரலைக் கேட்டுத் தயங்கி நின்றான் கமல்கான். பிறகு மரியாதையுடன் அவன் வணங்கி வெளியேறுவதை பாண்ட் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். 'இந்தப் பெண்ணைக் கண்டு கமல்கானே நடுங்குகிறானே!'

ஆக்டோபஸ்ஸி ஜேம்ஸ்பாண்டிடம் மனம் விட்டு பேசினாள். தன் தந்தையைப் பற்றிச் சொன்னாள். தான் வைரக் கடத்தலில் ஈடுபட்டிருந்ததை விவரித்தாள். தென்கிழக்கு ஆசிய நாடுகளிலிருந்து அழகான பெண்களைத் தேர்ந்தெடுத்து அவர்களைக் கொண்டு ஹோட்டல்களும் சர்க்கஸ் காட்சிகளும் நடத்துவதாகக் கூறினாள்.

உரையாடல் ஒருநாள் முழுவதும் நடைபெற்றது. கடைசியில் கனிந்த குரலில் கூறினாள் ஆக்டோபஸ்ஸி: "ஜேம்ஸ், நாளை நான் ஐரோப்பாவுக்குப் பயணமாகிறேன். அதற்கு முன் நீயும் நானும் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். நாம் இருவரும் ஒரே ரகத்தைச் சேர்ந்தவர்கள். நீ என்னுடன் இருந்துவிடு. நாம் இருவரும் கூடினால் உலகத்தையே வென்று விடலாம்!" அவள் கைகள் அவன் கைகளைப் பற்றின.

"என்னை விலைக்கு வாங்க முடியாது" என்று கடுமையாகக் கூறினான் பாண்ட். ஆனால் அவன் தன் கைகளை விடுவித்துக் கொள்ள முயற்சி செய்யவில்லை. அன்றிரவு ஆக்டோபஸ்ஸியின் படுக்கை அறையில் அவன் ஒப்புக் கொண்டான்: "நீ சொன்னது சரிதான்; நாம் இருவரும் ஒரே ரகம்!"

ஆனால் பாண்ட் அன்றிரவு தூங்கவில்லை. ஒரு பயங்கர சதித் திட்டத்தை கமல்கானும் ஆர்லோவும் உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்றும், அதில் ஆக்டோபஸ்ஸியை அவள் அறியாமலேயே ஈடுபடுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்றும் தோன்றியது.

ஜன்னல் வழியே நட்சத்திரங்களைப் பார்த்தவாறே சிந்தித்தான். ஆக்டோபஸ்ஸியின் மேஜை மீது அவள் நடத்தும் சர்க்கஸ் பற்றிய விளம்பரம் ஒன்றைக் கண்டது அவன் ஞாபகத்துக்கு வந்தது. கிழக்கு ஜெர்மனியில் கார்ல் மார்க்ஸ் மாநிலத்தில் ஒரு வார காலத்தில் நடக்கவிருந்தது அந்த சர்க்கஸ் காட்சி. அதே நேரத்தில், அதே இடத்தில் ஆர்லோவும் கமல்கானும் சந்திக்கத் திட்டமிட்டிருந்தனர் என்பது 007-க்கு நினைவிருந்தது. இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் ஏதேனும் தொடர்பு இருக்குமோ?

அசத்திய நித்திரைக்கு சற்று இடம் கொடுத்துவிட்டான் 007. யதேச்சையாகக் கண்விழித்த போது ஒரு கரிய உருவம் தன்னை நெருங்குவதைப் பார்த்தான். ஓங்கியிருந்த அதன் கையில் ரம்பம் போல் பற்களை உடைய வட்ட வடிவ ஆயுதம். ஒரே வீச்சில் ஒரு மனிதனின் தலையை சீவக் கூடியது. அந்த உருவம் சக்கரத்தைச் சுழற்றி வீசவும் பாண்ட் ஆக்டோபஸ்ஸியை உருட்டித் தள்ளிவிட்டுக் கட்டிலிலிருந்து துள்ளிப் பாய்ந்து தப்பினான். அதே சமயம் அறைக்கதவு படாரென்று ஓசையெழுப்பித் திறந்து கொள்ள இன்னும் இரு குண்டர்கள் கத்தியும், கோடாலியும் ஏந்தி உள்ளே நுழைந்தார்கள். வைரமேறிய கைகளே ஆயுதமாக அவர்களை எதிர்த்துப் போராட ஆரம்பித்தான் பாண்ட். உதவிக்கு வந்த ஆக்டோபஸ்ஸியைப் பின்னுக்குத் தள்ளினான். அவள் காவலர்களை அழைத்துவரப் போக யத்தனித்த போது அதற்கு அவசியமில்லாத விதமாக அச்சம்பவம் நடந்துவிட்டது: வட்டக் கத்தியை ஏந்தி வந்த உருவம் பாண்டைத் தாக்கியது. இருவரும் போராடிக்கொண்டே படுக்கை அறையை ஒட்டிய திறந்த வெளி மாடத்தை அடைந்தனர். போராட்டத்தின் வேகத்தில் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டே அந்த நிலா முற்றத்தின் தடுப்புச் சுவரைத் தாண்டி கீழே நிலவொளியில் பளபளத்த உதய்பூர் ஏரியினுள் விழுந்தனர்.

அவர்கள் விழுந்த ஓசையைத் தொடர்ந்து அமைதி: மயான அமைதி! ஓடிச் சென்று எட்டிப் பார்த்த ஆக்டோபஸ்ஸியின் கண்களில் பட்டது, பற்கள் தெரிய வாயைப் பிளந்து கொண்டு தலையைத் தூக்கிய ஒரு பெரிய முதலை! (தொடரும்)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on Behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka